# கல்கி பொருளடக்கம்





**மூஷிகர்:** நாம் ஓட்டுகிற வண்டி, முன்னும் பின்னும் மாடுகள் இழுப்பதால் நகர மாட்டேனென்கிறது என்கிறார் டி. டி. கே.

காங்கிரஸின் சோஷலிஸ சித்தாந்தத்தில் முன்னேற்றம் காண முடியாதென்பது இன்னுமா அவருக்குப் புரியவில்லை?

**குரோதி, சித்திரை 28 ★ மே 10**



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பதினேழாவது திருத்தம்

பதினெட்டாவது திருத்தம்

புதுப் புட்டியில்
பழைய மது

PK

காங்கிரஸ்
சர்க்கார்

சட்டி சுட்டதடா!

பதினெட்டாவது திருத்தம்

PK



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 41

# ஆண்டவன் செயல்!

சென்ற வார 'ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி நெஞ்சுருகுமாறு எழுதினர்: "பார பட்சமும், அகம்பாவமும், அச்சமும், இதர பல தீய குணங்களும் நிரம்பிய ஆட்சியாளரின் இதயத்திலேயே ஆண்டவனும் மோனத்தில் அமர்ந்திருக்கிறான். அவனுக்கு நான் விடாமல் வேண்டுகோள் விடுத்து வருகிறேன். ஆனால் அவன் லீலையை யாரே அறிய முடியும்? இதுவரையில் அவன் என் பிரார்த்தனைக்குச் செவி சாய்க்கவில்லை."

இதைப் படித்தபோது இரண்டு காரணங்களுக்காக உள்ளம் உருகியது. அடியார் ஒருவரின் அடைக்கல மனப்பான்மை ஒரு காரணம். ஆண்டவனின் அருட்பான்மை மற்றொரு காரணம். ஏனெனில், இந்த 'ஸ்வராஜ்யா' இதழ் வெளியாகும்போதே ஆண்டவன் ராஜாஜியின் வேண்டுகோளைத் தான் அலட்சியம் செய்யவில்லை என்பதற்கும் 'கோடி' காண்பித்து விட்டான்!

பன்னிரண்டாண்டுகளுக்கு முன்பு வேனிற்காலத்தில் தமிழகம் மழை என்பதையே காணாது தவித்தபோது, 'ஆண்டவன் அன்றி வேறு கதியில்லை' என்று அவனிடம் அடைக்கலம் புகுந்தார் அப்போது முதன் மந்திரியாக இருந்த ராஜாஜி. ஆண்டவனின் அருள் மழையாகவே கனமழை கொட்டிற்று. தண்ணீர்ப் பஞ்சம் தீர்ந்தது. இப்போதும் அதேபோல், 'பகை நடுவினில் அன்புருவான நம் பரமன் வாழ்கிறான்' என்ற கவி வாக்கினை அவர் அநுபவமாக்கி, எதிராளிகளிடமும் உள்ள எம்பெருமானுக்கு விண்ணப்பம் விடுத்ததும் இரண்டு அரிய சூசகங்கள் தோன்றியுள்ளன.

பதினேழாவது, பதினெட்டாவது அரசியல் சாஸனத் திருத்தங்கள் நாட்டில் யதேச்சாதிகாரத்தை ஆழ வேரூன்றச் செய்துவிடுமே என்ற வேதனையில்தான் ராஜாஜி மேற்கண்டவாறு எழுதினர். அவரது எழுத்துப் பிரசுரமாகுமுன்பே பதினெட்டாவது திருத்தத்தை ஆட்சியாளர்கள் கைவிட்டு விட்டார்கள்.

பதினேழாவது திருத்தமும் சற்றும் எதிர்பாராதவிதத்தில் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது. பதினேழாவது திருத்தத்தின்மீது மக்கள் சபையில் நடந்த வாக்கெடுப்பில் சபை அங்கத்தினர்களில் பாதிக்குக் குறைந்தவர்களே அதனை ஆதரித்ததால் மசோதா தோற்றுப்போயிற்று. இதைத் 'தெய்வாதீனமான வாய்ப்பு' என்று 'ஹிந்து'ப் பத்திரிகை கூறியிருப்பதை நாம் பூரணமாக ஆமோதிக்கிறோம். ஆண்டவன் செயலே இது என்று நினைக்கிறோம்.

ஆனாலும் என்ன? ராஜாஜியின் குரல் ஆண்டவனுக்குக் கேட்டுவிட்டது. ஆனால் ஆண்டவன் சூசகமாகத் தெரிவித்துள்ள குரலை ஆட்சியாளர்கள் கேட்டதாகத் தெரியவில்லை. பதினேழாவது திருத்தத்துக்குப் பத்தொன்பதாவது திருத்தம் என்று மறு பெயரிட்டு ஒரு விசேஷப் பார்லிமெண்டுக் கூட்டத்தில் அதனைப் பிரேரிக்க இருக்கிறார்கள். மசோதா விவாதத்துக்கு வரும் இடைக்காலத்துக்குள் ஆளும் கட்சி அங்கத்தினர்கள், அந்தரங்கத்திலுள்ள இறைவனின் குரலைக் கேட்பார்களா? கேட்டு, அதன்படி நடப்பார்களா?

இப்படி ஓர் அரிய மனமாற்றம் ஏற்படலாகாதா என்றே நாடும், இந்த நாட்டின் பிரபல ஏடுகளும் விரும்புகின்றன. மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஓர் அரசியல்

சாஸனத் திருத்தத்தை விட, மக்கள் சபைக் கமிட்டிகளில் இடம் பெறுவதைப் பெரிதாகக் கருதிச் சபைக்கு ஆஜராகியிராத அங்கத்தினர்களிடம் இத்தகைய ஒரு நல்ல மாற்றத்தை எதிர்பார்ப்பதில் பொருளில்லை என்றே தோன்றும். பதினேழாவது திருத்த மசோதாவினால் பாதிக்கப்படும் நாற்பதுக்கு மேற்பட்ட பழைய சட்டங்களின் உட்கருத்து என்ன என்பதிலோ, மசோதாவை எதிர்த்து வந்த 1,36,000 ஆட்சேபக் குறிப்புக்களின் வாதம் என்ன என்பதிலோ இதுவரை அக்கறை செலுத்தாத பெரும்பான்மை அங்கத்தினர்கள் இப்போது திடீரெனக் கட்சிக் கட்டுப்பாடுகளை மீறி மசோதாவின் எதிர் வினைவுகளை ஆராய்ந்து பார்த்து மனச்சாட்சிப்படி நடப்பார்கள் என்று நம்பவும் இடமில்லைதான். சாஸனம் இயற்றியபோது, சுயப் பற்று இல்லாத விஷயஞானமுள்ளவர்கள் ஆய்ந்தோய்ந்து பார்த்து எடுத்த முடிவுகளை இன்று சுயப் பற்றுக்கும் கட்சிக் கட்டுப்பாட்டுக்கும் உட்பட்டவர்கள் அவசர அவசரமாக மாற்றும் நிலையை எண்ணி வருந்தத்தான் வேண்டியிருக்கிறது. இந் நிலையிலும் 'தெய்வாதீனம்' என்று கருதக்கூடிய ஒரு சூழ்நிலை ஏற்பட்டு மசோதா ஒன்று தோல்வி அடைந்தால் அதிலிருந்து படிப்பினை பெற ஆட்சியாளர்கள் தயாராக இல்லை. முரட்டுப் பிடிவாதமாக எப்படியேனும் மெஜாரிட்டி பெற்று 'எங்கள் கருத்தை நிலைநாட்டியே தீருவோம்' என்று அவர்கள் புது ஏற்பாடு செய்கிறார்கள். தீர்மானமாக முடிவாகிவிட்ட விஷயத்துக்காக மக்கள் சபையில் நீண்ட நீண்ட கூட்டங்கள் போட்டு, மும்முறை மசோதாவைப் படிக்க வேண்டியது அவசியம் தானா என்றே நினைக்கத் தோன்றுகிறது. ராஜாஜி வேதனையுடன் வேடிக்கை செய்வது போல், 'ராஷ்டிரபதி இதற்கு அநுமதிச் சீட்டு அளித்துவிட்டபடியால் போதிய வோட்டுப் பெறவிட்டாலும் இந்த மசோதா பூர்விகத்திலிருந்தே அமுலுக்கு வந்துவிட்டது' என்று புதிதாகச் சட்டம் செய்துவிடலாம். மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கச் சிறிதும் இடமின்றி, கட்சிக் கொறடாக்களின் கெடுபிடிப்படியே அங்கத்தினர்கள் நடப்பது என்றால் மனமாற்றத்தை எப்படி எதிர்பார்க்க முடியும்?

என்றாலும் ஆண்டவன் யார் யாரை எப்படி ஆட்டி வைப்பான் என்று நாம் சொல்ல முடியாது. 'அவனையே சரணடைவாய்' என்றான் கண்ண பெருமான். அவனைத்தான் நாம் சரணமடைகிறோம்.

அரசியலாயினும், பொருளாதாரமாயினும், இலக்கியமாயினும் ஆண்டவனை நீத்து எதுவும் இல்லை — இந்தியாவில் எந்தத் துறையைச் சேர்ந்த எந்தக் காரியமும் ஆண்டவனை முன் வைத்தே நடக்க வேண்டும் — என்று ஸ்வாமி விவேகாநந்தரும், மகாத்மா காந்தியும் இன்று நம் ராஜாஜியும் கூறுவதற்கேற்ப இறைவனையே நம்புகிறோம். தலைவரவர்கள் சொல்வது போல், அவன் நம்முடன் எப்படி லீலை புரிவானோ, யார் அறிய முடியும்? தோல்வியே அடைந்தாலும் அதுவும் ஆண்டவனே அளித்தது என்றெண்ணி அவனது பிரசாதமாக ஏற்போம். அவன் சங்கற்பம் வேறு ஏதோ இருக்கிறது, அதற்காகவே சோதனை செய்தான் என்றெண்ணி அவனையே நம்பி நம் பணியில் மேலும் ஊக்கம் பெறுவோம்!

# நினைவூட்டுகிறோம்!

'**கா**ச்மீரம் இந்தியாவுடன் இணைந்து விட்டது; இதை மாற்ற முடியாது, மறுக்க முடியாது' என்பதாகக் கிளிப் பிள்ளைகளின் கோஷ்டி கானம் நடைபெற்று வருகிறது. சுமுகமான புது முடிவுகள் எடுக்க வேண்டிய தருணத்தில் இந்தப் பழைய வாதத்தை வைத்தே ஷேக் அப்துல்லா அவர்களைச் சரமாரியாகக் கேள்விகள் கேட்டு அவரை அலுத்துப் போகச் செய்து வருகிறோம். இச்சமயத்தில் பழைய நிலவரங்களை நாம் சிறிது நினைத்துப் பார்ப்பது நலமாயிருக்கும். உணர்ச்சி வசப்பட்டு ஒருவரையொருவர் வார்த்தையால் தாக்கிக்கொள்வதை விட அதிகார பூர்வமான தஸ்தாவேஜுகளிலிருந்து, நம்முடைய பழைய கருத்தை எடுத்துக் காட்டுவது சிலாக்கியமாக இருக்கும். 1948ம் ஆண்டு பிப்ரவரி 5-ந் தேதியிலிருந்து மார்ச் 2உ வரை நடைபெற்ற உலக சபைக் கூட்டத்தில், காலஞ்சென்ற ஸ்ரீ என். கோபாலசுவாமி அய்யங்கார் நிகழ்த்திய உரையைப் பார்ப்போம்:

> " 'காச்மீர இணைப்பைத் தாற்காலிகமான ஏற்பாடு என்றே இந்தியா இதுவரை கூறிவந்துள்ளது. நெருக்கடி நிலைமையைச் சமாளிக்க வேண்டியே இந்த இணைப்பை இந்

# பலன் கிடைக்குமா?




தியா ஒப்புக்கொண்டுள்ளது. நெருக்கடி விலகியவுடன் இணைப்பு விஷயத்தைப் பொதுஜன வாக்கெடுப்பு மூலம் முடிவு செய்யலாம் என்பதே இதுவரை இந்தியாவின் கருத்து' என பாகிஸ்தான் பிரதிநிதி கூறியுள்ளார். இது முழுதும் சரியான வாதமல்ல. பாகிஸ்தான் பிரதிநிதியின் வாதத்தை அடியிற் கண்டவாறு செப்பம்செய்யலாம்: 'காச்மீரம் ஆபத்தில் சிக்கியபோது, அது அழிந்து போகாமல் வலுவாகக் . காப்பதற்காகத் தன்னுடன் காச்மீரம் இணைந்ததை இந்தியா ஒப்புக் கொண்டது. எனவே காச்மீரம் இந்தியாவுடன் இணைந்து விட்டதை அதனுடைய மாற்றவொண்ணாத முடிவு என்று நாம் நிர்ப்பந்தம் செய்ய மாட்டோம். நெருக்கடி நிலைமை தீர்ந்து சகஜ நிலை ஏற்பட்ட பின் காச்மீரம் சுதந்திரமாகப் பொதுஜன வாக்கெடுப்பு நடத்தித் தான் இந்தியாவுடன் சேர்ந்ததை ஊர்ஜிதம் செய்யலாம்; அல்லது பாகிஸ்தானுடன் சேரலாம்; அல்லது தனி சுதந்திர நாடாக இருக்கலாம். காச்மீரம் தன் மனத்தை மாற்றிக் கொள்ள விரும்பினால் நாம் குறுக்கே நிற்க மாட்டோம். இதுவே இந்தியாவின் கருத்து என்பது என் அபிப்பிராயம்.''

காச்மீர விவகாரத்தில் மிகவும் முக்கியத்துவம் பெற்றிருந்த இந்தியப் பிரதிநிதி ஸ்ரீ என். ஜி. அய்யங்கார் அவர்கள், அன்றைய அரசாங்கத்தின் கருத்தை இம்மியும் தவறாகப் பிரதிபலித்திருக்கமாட்டார் என்று நாம் நிச்சயமாகக் கூறலாம். அவரது உரையைப் படித்த பின்னும் காச்மீர இணைப்பு தீர்ந்து போன விஷயம் என்று பிடிவாதம் செய்யலாகாது. ரயத்வாரி குடியானவர்களைப் பற்றி அம்பேத்கர் அவர்கள் சர்க்கார் தரப்பில் கொடுத்த உறுதி மொழியை அலட்சியம் செய்வது போலவே, ஸ்ரீ கோபாலசுவாமி அய்யங்கார் கொடுத்த உறுதி மொழியையும் அலட்சியம் செய்தால் உலகத்தார் நம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள்? ஆனபடியால் பிடிவாதங்களை விட்டு விட்டு நீதி சாஸ்திர முறைப்படி நடந்து கொள்வோமாக.

# பனாமா

இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை




செழுமையான
- வர்ஜீனியாப் புகையிலை
- சீர்நிரவிய கலவை
- புதுமை மயமானது




விசேஷக் கலவை செய்வோர் :
கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட். பம்பாய்-56
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

# என்ன சேதி?

## நஷ்டத்தில் அபிவிருத்தி!

சர்க்கார் நடத்தும் தொழில்கள் வெகு நன்றாக நடைபெறுகின்றன என்று ஆளும் கட்சியினர் வாதம் செய்வதையும் அவை ஒழுங்கீனத்துக்கு எடுத்துக் காட்டாகவே அமைந்துள்ளன என்று எதிர்க் கட்சியினர் பிரதிவாதம் செய்வதையும் நாம் நீண்ட நாளாகக் கண்டு வருகிறோம். சமீப காலம் வரை சர்க்கார் தொழிலின் லாப நஷ்டங்களைப் பற்றிப் பாரபட்சமில்லாத புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை. அதிர்ஷ்ட வசமாகச் சென்ற ஆண்டிலிருந்து நம் தேசத்தின் ஆடிட்டர் ஜெனரல் இது குறித்து நம்பகமான அறிக்கை வெளியிட்டு வருகிறார். மத்திய சர்க்காரின் (வர்த்தக) தணிக்கை அறிக்கை என்ற இந்த வெளியீட்டில் சர்க்கார் தொழில்களின் அலங்கோலப் போக்கு வெட்ட வெளிச்சமாகியுள்ளது.

1961–62 ஆண்டில் சர்க்கார் நாற்பத்தாறு தொழிலகங்களில் சுமார் 1,090 கோடி ரூபாய் மூலதனமிட்டு அதற்கு ஏறக்குறைய பதினொரு கோடி ரூபாய் நஷ்டப் பட்டிருக்கிறது. 1962–63ம் ஆண்டில் இந்தத் தொழிலகங்களின் மூலதனம் அபிவிருத்தி அடைந்தது. நஷ்டமும் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. அவ்வாண்டு சர்க்கார் தொழில்களில் 1294 கோடி ரூபாய் மூலதனம் போடப்பட்டு, சுமார் பன்னிரண்டரைக் கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டுள்ளது. இவ்வித 'நஷ்ட அபிவிருத்தியைத்' தனியார் தொழிலகம் எதிலேனும் காண முடியுமா? ஓராண்டில் சுமார் ஒன்றே முக்கால் கோடி ரூபாய் அதிக நஷ்டம் ஏற்பட்டதற்கு முக்கிய காரணம், பிரமாதமாகப் பறைசாற்றப்படும் ஹிந்துஸ்தான் உருக்காலையில் நஷ்டம் உயர்ந்து கொண்டே போவதுதான். 1961–62ல் பத்தொன்பதரைக் கோடி ரூபாய் நஷ்டப்பட்ட உருக்காலை 1962–63ல் இருபத்து நாலு கோடி ரூபாய் நஷ்டப்பட்டிருக்கிறது! என்னே முன்னேற்றம்!

முன்பு தனியார் துறையில் இருந்த தொழில்களைச் சர்க்கார் எடுத்துக் கொண்ட பிறகு, அப்போதிருந்த விலைக்குக்கூடச் சர்க்காரால் தங்கள் உற்பத்தி விலையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. மாறாக, சர்க்காரின் டம்பாச்சாரிச் செலவு காரணமாக அதன் உற்பத்திப் பொருட்களின் அகவிலை ஒரேயடியாக உயர்ந்திருக்கிறது. இதற்கு ஈடுகொடுப்பதற்காகத் தனியாரும் அந்தப் பண்டங்களின் விலையை முன்பிருந்ததையும்விட உயர்த்த வேண்டுமென அரசாங்கம் கட்டாயம் செய்திருக்கிறது. இதே சமயம் இன்னொரு பக்கத்தில் விலைக் குறைப்பு பற்றியும், பொருளாதார முன்னேற்றம் பற்றியும் ஆட்சித் தலைவர்கள் பிரவசனம் புரிகிறார்கள்!

## தமிழில் வால்மீகி!

நாவலக் கண்டம் என்று சொல்லக் கூடிய ஒரு விஸ்தாரமான நிலப்பரப்பிலுள்ள எண்ணிறந்த மக்களை ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நன்னெறியில் செலுத்தி வரும் சக்தியில் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்துக்கு ஈடாக உலக இலக்கியங்களில் எதையுமே கூற இயலாது. எடுத்துரைக்கச் சாத்தியமில்லாத பெருமைகள் பல பொருந்திய இந்த ஆதி காவியத்தைத் தமிழாக்கித் தந்தவர்கள் பலர். அவர்களில் கீர்த்தனாசாரிய ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்களுக்குத் தனி இடம் உண்டு. ஆழ்ந்த பக்தியும், ஆராய்ச்சிப் புலமையும் கொண்ட அவர், எளிமையும் சரளமும் கூடிய தமிழில் செய்துள்ள ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பு தற்போது சிறந்த முறையில் புத்தக உருவெடுத்து வெளியாகவிருக்கிறது. புத்தக உரு அளித்தவர்கள் லிட்டில் ஃப்ளவர் கம்பெனியார் என்பதே அதன் தயாரிப்பு எவ்வளவு சிறப்பாக இருக்கும் என்பதற்குச் சான்று. புத்தகத்தின் பதினைந்து பகுதிகளையும் சம்ஸ்கிருத சேவா சமிதியின் ஆதரவில் டாக்டர் வி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் வெளியிடுகிறார்கள் என்பது அதன் கௌரவத்துக்குச் சான்று. இந்த நற்பணிக்கு ஸ்ரீ காமகோடி பெரியவர்கள் பூரண அநுக்ரகம் செய்திருக்கிறார்கள் என்பது அதன் தெய்விகத்துக்குச் சான்று. இம்மாதம் ஏழாம் தேதி மாலை ரஸிக ரஞ்சனி சபையில் வெளியீட்டு விழா நடைபெறுகிறது.

ஸ்ரீமத் ராமாயண மொழிபெயர்ப்புடன் பல துணை நூல்களையும் குறைந்த விலைக்கு அளிக்க லிட்டில் ஃப்ளவர் கம்பெனியார் திட்டம் தயாரித்திருக்கிறார்கள். திட்டம் பூரண வெற்றி பெற்று ஸ்ரீராமபிரானும், வால்மீகி முனிவரும் நம் நாவிலும் நெஞ்சிலும் உறைய ஆஞ்சநேயன் அருள்வானாக!

# கல்கி 25 வெள்ளி விழா பரிசுப் போட்டி

எழுத்தாள அன்பர்களுக்கு ஒரு நற்செய்தி. வெள்ளி விழா சிறு கதை, நாவல் போட்டிகளின் முடிவுத் தேதியைச் சில மாதங்களுக்குத் தள்ளி வைத்தால் சௌகரியமாயிருக்கும் என்ற பல எழுத்தாளர்களின் வேண்டுகோளுக்கிணங்க முடிவுத் தேதியை 31-12-64ந் தேதிக்கு மாற்றியிருக்கிறோம்.

இந்தச் சந்தர்ப்பத்தை எழுத்தாள அன்பர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம். தொடர்கதை, சிறுகதை ஆகிய இலக்கியப் பகுதிகளில் புது சகாப்தத்தை உண்டுபண்ணிய 'கல்கி'யின் இருபத்தைந்தாவது ஆண்டுவிழாவை யொட்டி இப் பகுதிகளின் வளர்ச்சிக்காக இருபத்தையாயிரம் ரூபாயை ஒதுக்கிப் பரிசுகளாக வழங்கத் தீர்மானித்திருக்கிறோம்.

சிறந்த நாவல்களுக்கு மூன்று பரிசுகளும் சிறுகதைகளுக்கு மூன்று பரிசுகளும் தருவதாக இருக்கிறோம். சிறந்த நாவல்களுக்கு :

| | | |
|---|---|---|
| **முதற் பரிசு** | ... | ரூ. 10,000 |
| **இரண்டாவது பரிசு** | ... | ரூ. 7,500 |
| **மூன்றாவது பரிசு** | ... | ரூ. 5,000 |

சமூக நாவல்களாயிருக்க வேண்டும் அல்லது சரித்திர நாவல்களாயிருக்க வேண்டும் என்ற கட்டுத்திட்டங்கள் ஏதும் கிடையாது. தமிழ் இலக்கிய முன்னேற்றத்துக்கு மேலும் புகழ் தேடித் தருவதாக அமைய வேண்டும் என்ற ஒரே நிபந்தனைதான்.

**அதே போலத்தான் சிறுகதைகளுக்கும்**

| | | |
|---|---|---|
| **முதற் பரிசு** | ... | ரூ. 1,000 |
| **இரண்டாவது பரிசு** | ... | ரூ. 500 |
| **மூன்றாவது பரிசு (பத்துக் கதைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வீதம்)** | ... | ரூ. 1,000 |

**ஆக மொத்தம் இருபத்தையாயிரம் ரூபாய்**
**(ரூ. 25,000) பரிசுகளாக வழங்கப்பெறும்**

நந்தமிழ் நாட்டு எழுத்தாளர்களுக்கு ஒரு வேண்டுகோள்: ஆற அமர சிந்தித்துத் தமிழ் மண்ணுக்கும், 'கல்கி' பத்திரிகைக்கும் அழியாப் புகழ் தேடித் தரும் சிறுகதை, நவீனங்களை எழுதுங்கள்.

சிறுகதைகள் கல்கியில் ஆறு பக்கங்களிலிருந்து எட்டு பக்கங்களுக்குள் வரும்படியாக இருக்கலாம். நாவல்கள் கல்கி பத்திரிகையில் வாரம் ஆறு பக்கங்களாக ஒரு வருடம் வருமளவுக்கு அமையப் பெறலாம். ஒருவர் எத்தனை கதைகள், நாவல்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**1964-ம் ஆண்டு டிசம்பர் முப்பத்தியொன்றும் தேதிக்குள் எங்கள் காரியாலயத்துக்கு வந்து சேரும்படி அனுப்பி வைத்தால் போதுமானது**

இந்தப் போட்டி சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

இலக்கியத் துறையிலே சிறந்து விளங்கும் அறிஞர்கள் பஞ்சாயத்தார்களாகப் பொறுப்பேற்றுப் போட்டிக்கு நீதி வழங்குவார்கள்.

எழுத்தாள அன்பர்களின் ஒத்துழைப்பு 'கல்கி'யின் பணியை மேலும் சிறந்தோங்கச் செய்யும் என்று நம்புகிறோம்.





# மனதுக்கினியவள்!

மதுரமோகினி, மனதுக்கினியவள்,

மலரன்ன மென்மேனியாள்!

தவிர மல்லிகையின் மணம்கமழும் இவள் அழகே அழகு

## இவள் ஜேய் மங்கை...

நீங்களும் ஜேய் சோப் உபயோகியுங்கள். மிருதுவான அதன் நுரை, உங்களுக்குப் புது மலர்ச்சியும், மல்லிகையின் நறுமணமும் அளிக்கிறது. ஜேய் சோப் உங்கள் மேனி எழிலை மேன்மையுறச் செய்கிறது.

★ மிதமிஞ்சிய மல்லிகை மணம்!

★ இளஞ்சிவப்பு நிறம்!

★ பளபளக்கும் ரேக்கு 'ராப்பர்'

**உங்கள் மேனி எழில் பெருக**

**ஜேய் அழகு சாதன சோப்**




BI-TJS-73 TAM

டாடா தயாரிப்பு

# நீரோட்டம்

எஸ்.ரங்கநாயகி

## பதின்மூன்றாம் அத்தியாயம்

சுசீலா தலை குனிந்து கொண்டே உள்ளே போனாள். தன் குழந்தைக்கும் மேலாகச் சுசீலாவின் குழந்தை இருக்க வேண்டும் என்பதற்காக யசோதை கணவரை உடனே அனுப்பிக் காப்பு வாங்கி வரச்செய்து, அதே நேரத்தில் அண்டை, அயலாரையும் வரவேற்க ஏற்பாடு செய்திருக்கிறாள். சித்தி மிகவும் கெட்டிக்காரிதான்.....

......இல்லை..... இல்லை.... எல்லாமே கண் துடைப்பு வேலை..... அவளுக்குத் தெரியாதா? இரண்டு விதமாகவும் எண்ணிக் குழம்பினாள் சுசீலா.

இரவு படுத்தபோது யசோதை ஏதேதோ பேசிக்கொண்டேயிருந்தாள். ''சுசீலா, நீ அப்போ கீழே இல்லாமப் போயிட்டியே... உன் அம்மா நீ பிறந்தபோது நூறு ரூபாய் கொடுத்தாங்களாம். இப்போ அம்பது கொடுத்தால் போதும்னு அத்தை தந்திரமாப் பேசிப் பணத்தை வாங்கிட்டாங்க!''

சுசீலாவுக்கு அப்பொழுதுதான் உண்மை புரிந்தது. பானுவுக்கு அத்தை ஆசையோடு காப்பு போடவில்லை. பணத்தைச் சுரண்டுவதற்கான வழிஅது. பானுவைவிடக் கண்ணனே அதிர்ஷ்டமுள்ளவன். அவனுக்கு அணிவித்த காப்பு தங்கம் மட்டுமல்ல; அன்பும் பரிவும் கலந்து செய்யப்பட்டது.

''சித்தி! அவள் பொய் சொல்லியிருக்கிறாள். நீ ஏன் பணம் கொடுத்தாய்?'' என்று சுசீலா கேட்டாள்.

''வீட்டுக்கு வராதவர்கள் வந்து கேட்கும் போது இல்லேன்னு சொல்லிவிட முடியுமா? பெரியவர்கள் சந்தோஷமாகப் போகட்டுமே. யார், குறைப்பட்டாலும் எனக்கு மனம் கேட்பதில்லை, சுசீலா!''

''உன் குணம் இப்படி இருப்பதால்தான் எல்லோரும் உன் தலைக்கு மேல் ஏறுகிறார்கள்.''

''அப்படி ஏறி எல்லோருமே சந்தோஷமாக இருந்து விட்டால் நான் எவ்வளவு பாரத்தை வேண்டுமானாலும் தாங்குவேன் சுசீ!''

இதைக் கேட்டுச் சுசீலா சடக்கெனத் திரும்பிச் சித்தியை நோக்கினாள். யசோதையின் கண்களும் அவளை நோக்கிக் கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள். சுசீலாவின் மனத்தில் கிளம்பிய அசுரவேகம் சற்றுத் தோல்வியைக் கண்டது. தன் கண்களை மீண்டும் மறுபுறம் திருப்பிக் கொண்ட போதுதான் மனச் சுழலின் போர் முரசு சற்றுத் தணிந்தது. அவள் கண்களை மூடிப் படுத்தாள்.

யசோதையின் உடம்பு நன்றாகக் குணமாகி விட்டது. அவள் நடமாட ஆரம்பித்து விட்டாள். குழந்தையின் வளர்ச்சிபற்றித் தியாகுவுக்கு ராஜுவின் மூலம் கடிதம் எழுதினாள். தியாகுவிடமிருந்து சுசீலாவுக்கு ஓரிரு கடிதங்கள் வந்தன. சுசீலா பதிலும் எழுதவில்லை. வந்த கடிதங்களைக் கிழித்தெறிந்தாள்.

ராஜு தம் மகள் பானுவை எவ்விதம் தூக்கி வைத்துக் கொஞ்சிக் குலவினாரோ, அதே போல் கண்ணனையும் தூக்கிக் கொண்டார். பானுவுக்கு அழுகை அதிகம். சதா தூக்கி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற பிடிவாதம். அதனால் வீட்டில் இருந்தவர்களுக்கும் சற்றுக் கஷ்டம். அவள் அழுகையை நிறுத்த ராஜு அவளைத் தூக்கி வைத்து விளையாட்டுக் காட்டினால், சுசீலாவைப் பொறாமைப் பேய் பிடித்து ஆட்டியது.

ஒரு நாள் யசோதை குழந்தை கண்ணனைத் தூக்கி மார்போடு அணைத்து முத்தமிட்டாள்.

''சுசீலா, நீ அதிர்ஷ்டசாலிதான். குழந்தை அழுவதேயில்லை.''

''தூக்குவாரற்ற தன் துரதிருஷ்டம் அவனுக்குக் குழந்தை முதலே தெரிந்திருக்கிறதே'' என்றாள் சுசீலா கசப்பாக.

''குழந்தையை ஏன் இப்படிப் பேசுகிறாய்? அவனுக்கு அம்மா இல்லையா, அப்பா இல்லையா.......?''

''போதும் சித்தி, என் குழந்தையைப் பற்றி நீ ஒன்றும் கூற வேண்டாம்'' எனக் கூறிய சுசீலா, அவள் கையிலிருந்து குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு மாடிக்கு விரைந்தாள்.

''சுசீலா ஏனோ இப்படிச் சிடுசிடுப்பாகி விட்டாள்'' என்று ராஜு பெருமூச்சுடன் கூறினார்.

''நானும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்து விட்டேன். தன்

மனக் குறையை அவள் எடுத்துக் கூற வில்லை. தியாகுவும் மழுப்பி விட்டான். இவர்கள் இருவரையும் சேர்த்து வைக்க ஒரே ஒரு வழிதான் உண்டு. குழந்தை யைக் கொண்டு விடும்படி தியாகுவிட மிருந்து கடிதம் வருமென எதிர்பார்க் கிறேன். இன்னும் ஒரு வாரத்தில் வராவிடில் சுசீலாவை நீங்களே அழைத்துக் கொண்டு கல்கத்தாவுக்கு ஒரு முறை பிரயாணம் செய்து விட்டு வருவது நல்லதல்லவா?''

ராஜு ஒரு முடிவுக்கும் வரவில்லை. எழுந்து வெளியே சென்று விட்டார்.

யசோதை எதிர்பார்த்தது வீண் போகவில்லை. குழந்தையையும் சுசீலா வையும் கொண்டு விடும்படி தியாகுவிட மிருந்து கடிதம் வந்தது. சுசீலாவே கடிதத்தை முதலில் பார்த்தாள். முகம் சிவக்கக் கடிதத்தைத் தந்தையிடம் எறிந்தாள்.

யசோதைக்குக் குதூகலம். ''சுசீலா! தியாகுவின் கடிதத்தைப் பார்த்தாயல் லவா? கண்ணனை விட்டுப் பிரியவேண்டு மென்று நினைத்தால் வருத்தமாக இருக் கிறது. ஆனால் நான் எத்தனை நாளைக் குத்தான் வைத்திருக்க முடியும்? அவன் அப்பாவுக்கும் அவன் ஆனந்தம் கொடுக்க வேண்டாமா?'' என்று கூறியவள், பிறகு தன் கணவரின் பக்கம் திரும்பி, ''நல்ல நாளாகப் பார்த்து வாருங்கள்'' என்றாள்.

''சித்தி!'' கோபக் கனலுடன் குரல் வெளிப்பட்டது.

யசோதை அவனை நோக்கினாள்.

''சித்தி! உங்கள் இருவருக்கும் இஷ்டமிருந்தால் என்னை வைத்துச் சோறு போடுங்கள். இல்லாவிடில், வெளியே விரட்டுங்கள்..... கல்கத்தா வுக்கு விரட்டும் யோசனையை மட்டும் கைவிடுங்கள்.''

யசோதையும், ராஜுவும் ஸ்தம்பித்து நின்று விட்டனர்.

''சுசீலா! இதோ பார், என்னருகில் வாம்மா.'' ராஜு மகளை நோக்கிக் கூறினார். சுசீலா அவர் அருகில் சென்றாள்.



"இங்கே உட்கார்."

கவிலா உட்கார்ந்தாள்.

ராஜு மெதுவாக அவள் முதுகைத் தடவிக் கொடுத்தார்.

"கவிலா! இதோ பார்.... பெண்கள் கணவன் வீட்டில் இருப்பதுதானே நல்லது அம்மா! உன் மனத்தில் என்ன குறை, என்ன கஷ்டம்? உனக்கு ஒரு குறையும் இருக்கக் கூடாது என்பதற்காக நான் எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பேன்! நீயே ஒரு முறை பழைய வாழ்க்கையை நினைத்துப் பார். உன் அம்மா உன்னையும் என்னையும் எவ்வளவோ ஆட்டி வைத்தாள். நீ தாயின் அன்பே இல்லாமல் இருந்து விடுகிறாயே என நான் தாயாகவும் அன்பு செலுத்தவில்லையா? அம்மா போனபின் நீ தாயற்ற அநாதை என்று கூறப்படுவதைப் பொறுக்காதவனாக வயதான காலத்தில் விவாகம் செய்வது தவறு என அறிந்தும் உன் வயதுடைய பெண்ணின் வாழ்வைப் பாழாக்கி உனக்குத் துணையாக அழைத்து வந்தேன்..."

"வாழ்வு பாழ் என ஏன் கூறுகிறீர்கள்? நான் அப்படி நினைக்கவில்லை." யசோதை குறுக்கிட்டாள்.

"நீ நடுவே பேசாதே, யசோதை !... கவிலா! உனக்கு ஏதேனும் தீங்கு வருமோவென யசோதையிடம் எவ்வளவு கண்டிப்புடன் நடந்து கொண்டு பாவத்தைச் சுமந்தேன்! நீயே நினைத்துப் பார். மனத்தில் தோன்றுவதை என்னிடம் பயப்படாமல் கூறு. யசோதை உனக்கு உன் அம்மாவாகத் தோன்றவில்லையா? அவளிடம் ஏதாவது குறை கண்டால் கூறு. நான் உலக அபவாதத்துக்கும் செவி சாய்க்காமல் அவளைக் குழந்தையுடன் பிறந்த வீட்டுக்கு அனுப்பி விடுகிறேன்....."

"ஐயோ, அப்பா! என்ன பேச்சு!" வீறிட்டபடி கவிலா தந்தையின் வாயைப் பொத்தினாள். கணவரின் பேச்சைக் கேட்டு யசோதையே ஆச்சரியத்துடன் நின்று விட்டாள்.

"நீ இப்படித்தான் கூறுவாய் என்று எனக்குத் தெரியும் கவிலா! யசோதையிடம் நீ உன் தாயிடம் காணாத அன்பையெல்லாம் காண்கிறாய். அதனால்தான் நீயும் ஒட்டி விட்டாய். அவளை நான் நன்றாக நடத்த வேண்டுமென மன்றாடியவளாயிற்றே நீ!..... அப்படியானால் இப்பொழுது நான் அவளிடம் நடந்து கொள்வதை நீ ஒவ்வொருமுறை தவறாக மதிப்பிடுவதை நோக்கினால் உன் மனத்தில் பெண்மைக்கும் சவால் விடும் சஞ்சலமாக ஏதோ புகுந்திருக்க வேண்டும். உன் இல்லற வாழ்வில் நீ என்ன குறை காண்கிறாய்? சொல், கவிலா, நீ என் அருமை மகள்.... உன் வாழ்வே எனக்கு அவசியம்..... தியாகு உன்னைப் படுத்துகிறானா? அல்லது...."

"வேண்டாம், அப்பா, வேண்டாம்! என்னைக் கேட்காதீர்கள். என் நெஞ்சு குமுறுகிறது. என்னால் பேசவே முடியவில்லை..... பேசவும் மாட்டேன். அப்பா.... அப்பா.... என்னை விட்டு விடுங்களேன்....."

எதிர்பாராது தந்தையின் அன்பு மொழிகள் அவள் நெஞ்சத்தைச் கண்டி இழுத்தன. தந்தையின் மீது அவள் என்னதான் குறை காண முடியும்....? அதே சமயம் தியாகுவைப் பற்றிக் கூறவும் அவள் விரும்பவில்லை... தந்தையின் அன்பு ஒரு பக்கமும், இல்லறத்து ஏமாற்றம் ஒருபுறமும் நெஞ்சுப் பையில் நிரம்பி முட்டி வந்தபோது கண்கள் தங்கள் பங்கிலே நீர் நிலையைத் திறந்து விட்டன. அவள் விக்கி விக்கி அழ ஆரம்பித்து விட்டாள்.

யசோதை மெதுவாக அவளை அணைத்தாள். "அழாதேம்மா, கவிலா! தியாகுவுடன் உன் வாழ்வு இப்படித் திரும்பும் எனத் தெரிந்திருந்தால் இந்த விவாகத்துக்கு நான் முனைந்தே இருந்திருக்க மாட்டேன்..... நீ இப்போது அப்பாவுடன் புறப்பட்டுப் போ. நீ எடை போட்டிருந்தபடியே இப்பொழுதும் இருக்குமானால்...."

"வேண்டாம் சித்தி. வேண்டாம். நான் போகவே மாட்டேன். நான் இங்கேயே இருக்கிறேன். என்னை விட்டு விடேன்." யசோதையின் மடியில் சாய்ந்து விட்டாள் கவிலா. அவள் விட்ட கண்ணீரில் யசோதையின் புடவை நனைந்தது.

பொங்கி வந்த கண்ணீரைத் துடைத்தபடி ராஜு அங்கிருந்து மெதுவாக எழுந்து சென்று விட்டார்.

மேலும் ஒரு மாதம் சென்றது. கவிலாவும் யசோதையும் அடுக்களையில் இருந்தனர்.

"கவி!" வாசலில் குரல் கேட்டது. பழகின குரல். கவிலாவும் யசோதையும் வாசலுக்கு ஓடினார்கள்.

தியாகு பெட்டி படுக்கையுடன் உள்ளே வந்து கொண்டிருந்தான். 'கவி' என்ற ஓர் அன்புக் குரலே யசோதைக்கு நம்பிக்கை ஊட்டியது. கவிலாவுக்கும் அந்தக் குரல் மனத்திலே பாரத்தைச் சற்றுக் குறைப்பதுபோன்ற உணர்ச்சியை ஏற்படுத்தியது.

"எனக்குச் சென்னைக்கே மாற்றலாகி விட்டது....." தியாகு பெட்டியைக் கீழே வைத்தபடி கூறினான்.



KISSAN




யசோதையும், சுசீலாவும் மேலும் ஒருமுறை நிம்மதியாக மூச்சு விட்டனர்.

"யசோதை, தேவலையே! மாமா விடம் கூறி யார் யாரோ பெரிசைப் பிடித்து இந்த ஊருக்கு என்னை மாற்ற வழி செய்து விட்டாயே! நீ எடுத்துக் கொண்ட சிரத்தைதான்...."

சுசீலா நன்றிப் பெருக்குடன், சித்தியை நோக்கினாள். அவளிடம் கூறாமலே சித்தி இவ்வளவு ஏற்பாடு செய்திருக்கிறாளே!

இதற்குள் வாசலில் டாக்ஸி ஹாரன் கேட்டது.

"அடாடா, மறந்து விட்டேனே! இதோ காரில் இருக்கிறாள். அவளுக்கும் இங்கு மாற்றலாகி விட்டது. அவளை ஹோட்டலில் விட்டுவிட்டு வருகிறேன்" என்று கூறியபடி தியாகு வாசலுக்கு விரைந்தான்.

சுசீலாவுக்கு உலகமே சுழல்வது போல் இருந்தது. யசோதை திக் பிரமை பிடித்து நின்று விட்டாள்.

"தியாகு! குழந்தை கண்ணனை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ சுசீலா வுடன் நாடகத்துக்குப் போய்விட்டு வா" என்று யசோதை கூறினாள்.

"ஓ! நான் தயார்...ஆனால் வருப வர்கள் வரவேண்டுமே யசோதை...!"

"ச், 'யசோதை' என்ற கூப் பாட்டை நிறுத்திக் கொள் என்று சொல்லிவிட்டேன் ஆயிரம் முறை..."

"ரொம்ப சரி, சித்தி என்று உறவு முறை வைக்கட்டுமா? அல்லது மாமி யாரே என்று விளிக்கட்டுமா?...இதோ பார் யசோதை, இந்தக் கூப்பாடு காவலெல்லாம் எனக்கு அவசியமில்லை. என்னைப் பற்றி நீ முழுதும் நம்ப லாம். பத்தினி என்று சுசீலாவை நான் ஏற்ற பிறகு என் மனம் சஞ்சலமே அடையாது...."

தியாகுவுக்கு மாற்றலான பிறகு அந்த வீட்டோடு அவனும் இருந் தான். வீட்டோடு இருப்பவன் அவளை 'யசோதை' என்று கூப்பிடும் போதெல்லாம் அவளுக்குக் கடந்த கால நினைவுகள் ஒரொரு முறை தோன்றி மறைந்தன. மனம் சஞ் சலம் அடையாவிடினும் அவள் ஊருக் கும் உலகுக்கும் பயந்தாள். ராஜு வயதானவரேயாயினும் அவளுக்குக் கணவர். மேலும் இப்போதுதான் கணவர் என்ற உரிமையில் சரளம் காண ஆரம்பித்திருப்பவர். அவர் மனத்தில் விஷ வித்து விழுந்துவிடக் கூடாதே என அவள் பயந்தாள்.

திருப்பதியில் மழிக்கப்படும் முடியெல்லாம் அந்நியச் செலாவணி சம்பாதிப்பதற்காக மேனாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும்.

— செய்தி

எங்கள் பேட்டையில் முடிதிருத்தகம் நடத்தி வந்த ஒரு நண்பர் கடையை மூடி விட்டுத் திருப்பதிக்குப் பஸ் ஏறி விட்டார்; அடுத்தாற்போல் மேல்நாடுகளுக்குச் செல்ல விருக்கும் ஒரு வியாபாரத் தூதுகோஷ்டியில் தமக்கும் ஓர் இடம் பிடித்துக் கொள்வது சாத்தியமா என்று ஆராய்வதற்காக!

* * *

ஜப்பானில் நெருப்பணைக்கும் படையில் பணியாற்றும் ஹிரோஷி நெருப்பணைப்பதில் தமக்குள்ள ஆசையால் உந்தப்பட்டுத் தாமே பல இடங்களுக்கு நெருப்பு வைத்து விட்டுப் பிறகு தீயணைக்கும் படையில் முன்னணி வீர ராகத் தீயுடன் போராடி யிருக்கிறார்.

— டோக்கியோ தகவல்

ஹிரோஷி குழந்தையாக இருந்த போது யாரேனும் அந்தக் குழந்தையைக் கிள்ளியும் விட்டுத் தொட்டிலையும் ஆட்டியிருப்பார்கள்.

* * *

தபால் பெட்டியில் பாம்பு புகுந்து கடிதங் களை யெல்லாம் நாசம் செய்து விட்டது.

— அலகாபாத் செய்தி

தபால் பெட்டிக்குள்ளே அது பெட்டிப் பாம்பாக அடங்கி இருக்க வில்லை என்பது உறுதி.

---

இந்நேரம்வரையில் வாசலில் இருந்த சுசீலா உள்ளே நுழைந்தாள்.

"சுசீலா! நீ அதிருஷ்டக்காரிதான் போ. நம் குழந்தையை யசோதை பார்த் துக்கொள்கிறாளாம். நீயும் நானும் இன்று சபாவில் நடக்கும் நாடகத் துக்குப் போய்விட்டு வரலாம். சீக்கிரம் கிளம்பு" என்று தியாகு சுசீலாவை நோக்கிக் கூறினான்.

சுசீலா அவனைக் கடுகடுப்புடன் நோக்கினாள். "நான் எங்கும் வர வில்லை. என் அழகுக்கு நாடகம் ஒரு கேடா?" என்றாள்.

"நன்றாய்க் கூறினாய் போ! உன் அழ கைக்காட்டிலும் அழகுள்ள பெண்கள் அங்கு வந்து விடுகிறார்களோ! உன் கோபம் ஒன்றே உன் அழகை எடுத்துக்

காட்டப் போதுமே! ....நம்ப சண்ணை ணைக் கேட்டுப் பார், சொல்வான்...'' தியாகுவும் சளைக்காமல் சிரித்தபடி பதில் கூறினன்.

ராஜு யசோதையோடு ஒட்டிப் பழகு வதைக் கண்ட பிறகு கபிலாவோடு நேர்முகமாகவே பழக ஆரம்பித்து விட்டான் தியாகு.

கபிலாவின் முகம் சிவந்தது. ''இங்கு ஒருவருடைய விமரிசனத்தையும் நான் அறிய விரும்பவில்லை... சித்தி! உன் னால் சும்மா இருக்க முடியவில்லையா? வேண்டுமென்றே ஏன் இழுத்து விடு கிறாய்?... நீ வேண்டுமானால் நாட கத்துக்குப் போவதுதானே? உன் குழந்தையை வேண்டுமானாலும் என் னிடம் விட்டு விட்டுப் போ. நான் சந்தோஷத்தை அனுபவிக்கப் பிறந்த வள் அல்ல என்பதுதான் உனக்குத் தெரியுமே...!''

''ஏ கபிலா பைத்தியமே! யசோதை யின் குழந்தையைப் பார்த்துக்கொள் ளும் பொறுப்பை மட்டும் தப்பித் தவறி ஏற்றுவிடாதே! 'உப்'பென்று வாயை வைத்துக் கொண்டு ஒத்து ஊதுபவன் கணக்கிலே ஆரம்பித்து, பிறகு நாதஸ்வரமாக மாறி அதற்கு மேலே கையையும் காலையும் ஆட்டித் தவுல் அடிக்க ஆரம்பித்து விட்டால் அப்புறம் அவனைப் படைத்தவன் வந்தால்கூட ஆலாபனை நின்று மங் களம் பாடாது... போதும் அம்மா, போதும்...'' என்று தியாகு கூறிக் கொண்டே போனன்.

''ஏ, தியாகு! நீ குழந்தையாக இருந்து படுத்தியதைக் காட்டிலும் பானு அழுது படுத்திவிட மாட்டாள்!'' யசோதை தன் குழந்தைக்கு ஆதரவு தேடினள்.

''இத்தாம்மா யசோதைத் தாயே! இதைக் கேட்டுக் கொள், உனக்கும் எனக்கும் வயது வித்தியாசம் மூன்று. நான் பெரியவன்.. நான் ஒரு வயதுக் குழந்தையாக இருந்தபோது படுத்திய பாட்டை நீ பார்த்ததாகச் சொல் கிறாயே? இந்த மாபெரும் பொய்யை இந்த ஸ்புட்னிக் காலத்திலே கூட நம்ப மாட்டார்களே!'' என்றான் தியாகு.

''நான் கண்ணால் கண்டதாகச் சொல்லவில்லையே! அப்பாவும் அம்மா வும் உன்னைப் பற்றிக் கதை கதை யாகச் சொல்லி யிருக்கிறார்களே!.... கபிலா! நீ வேணும்னாலும் கேட்டுக் கொள்....''

யசோதையின் வார்த்தையை முடிக்க விடவில்லை கபிலா. அவள் நெஞ்சு வெடித்துக் கொண்டிருந்தது. கணவன் நல் வழியில் இல்லை என அவள் தவிக் கிறாள். ஆயினும் சித்தியோ அவனு டன் சிரித்துப் பேசுகிறாள். அவள் அம்மா மட்டும் உயிருடன் இருந்தால் இப்படி யிருப்பாளா? மாப்பிள்ளையுடன் சண்டையிட்டு, திட்டி அவனை நல்வழி யில் திருத்த முயன்றிருக்க மாட்டாளா?

''சித்தி! இதெல்லாம் எனக்கு ரசிக்க வில்லை. என் மனம் எரிகிறது.'' வெளிப் படையாகக் கக்கிவிட்டாள் கபிலா.

''கண்ணீர் மூலமாகத் தண்ணீரை வெளியே விட்டு விட்டால் எரியும் மனத்தைத் தணிக்க நீர் இருப்ப தில்லை. கண் வழியே தண்ணீரை வெளியே விடாமல் இருக்கப் பழக ணும்...'' தியாகு எங்கேயோ பார்த்த படி கூறினன்.

கபிலாவுக்கு உடம்பெல்லாம் ஆட்டம் கண்டு துடிப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. உதடுகள் கோபத்தைக் கக்க ஒன்றோடொன்று மோதின.

''தியாகு! நீ இப்படிப் பேசுவது நன்றாக இல்லை'' என்று யசோதை இடைமறித்துக் கூறினள்.

''நான் தவறாக என்ன கூறிவிட் டேன்? கண்ணீருக்கும் தண்ணீருக்கும் உள்ள தத்துவத்தை எடுத்துக் கூறி னேன். அவ்வளவுதானே!... மாமா சொல்லுவார் நீகூடச் சிறு வயதில்...''

''சிறு வயதுக் காலத்தை இப்போது எங்கே நினைவுக்குக் கொண்டு வந் தீர்கள்?'' என்று கேட்டபடியே ராஜு மாடியிலிருந்து இறங்கி வந்தார்.

''சரியான சமயத்துக்குத்தான் வந் தீர்கள் மாமா! இந்த யசோதை சிறிய வயதிலே அழுது கொண்டே யிருப் பாளாம்...'' தியாகு ஆரம்பித்தான்.

''பொய், பொய்..... தியாகுதான் அழுவானும். அப்பா சொல்லுவார்.''

ராஜு இடையே கூறினர்: ''இரு வருமே அழுமூஞ்சிகளாக இருந்திருக் கிறீர்கள். இப்போது சிரித்துப் பேசி எல்லாவற்றையும் சகிக்கப் பழகிவிட் டீர்கள்... அதுபோல் இப்போது பானு அழுமூஞ்சியாக இருந்தாலும் பின்னல் சிரித்த முகம் ஆகி விடுவாள்...''

''மாமா! உங்களைத்தான் நீதிபதி யாக நியமிக்கணும். பானுக்கும் காவல் பூனைக்கும் தோழன்...யசோதை! மாமா உன்னை விட்டுக் கொடுக்கிறாரா பார்!''

''பின்னே என் வாழ்வு போல் எல் லோர் வாழ்வும் பாழாகி விடுமா?'' என்று கபிலா இடையே கூறினள்.

''கபிலா! ஏன் ஏதாவது பிதற்று கிறாய்?'' என்று ராஜு கேட்டார்.

''நான் என்னப்பா பிதற்றிவிட்டேன்? உங்களுக்குத் தெரியாது. உங்கள் மாப்

# கால்கேட்டின்மூலம் நாள்முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய்-துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்துள்ளன: இத்சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீர்யமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளில் புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்ந்திருக்கும் அதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.**

பிள்ளை சித்திரையை முதலிலேயே மணக்க இருந்தவர். அது நடக்காமல் போய் விட்டது. உலக ஒப்புக்காக என்னை மணந்தார்.... பிறகு இங்கேயே மாற்றல் வாங்கிக்கொண்டு...''

''சுசீலா!'' — கர்ஜனையுடன் அவள் வாயைப் பொத்தினான் தியாகு.

சுசீலா தனக்கு வந்த ஆத்திரத்தில் அவன் மனத்தில் கூட இதுவரை தோன்றியிராத வார்த்தைகளைப் படபடவெனக் கொட்டி விட்டாள். யசோதைக்கு அண்ட சராசரங்களே கிடுகிடுவென நடுங்குவது போல் கண்கள் இருண்டன. இதைக் கேட்டுக் கணவர் எவ்விதம் நினைப்பாரோ?...

தியாகுவும் சுசீலா இவ்வளவு தூரத்துக்குக் கூறுவாள் என்று நினைத்திருக்கவில்லை. ''மாமா! நீங்கள் எல்லையற்ற அன்பு வைத்திருக்கும் உங்களது புத்திரி என்பதாலும், என் மனத்தில் மனைவி என்ற ஸ்தானம் பெற்றவள் என்பதாலும் நான் சுசீலாவை அடிக்காமல் விடுகிறேன்'' என்றான் அவன் அளவற்ற சினத்துடன்.

''நீங்கள் அடிப்பதைத் தடுக்க இங்கு ஒரு நல்ல ஆத்மாவும் கிடையாது. அதனால் அடிக்கும் சுதந்திரமும் உங்களுக்கு உண்டு'' என்று சுசீலா கூறினாள் குரோதமாக.

தியாகு அவளை விழித்துப் பார்த்தான். பிறகு ராஜுவின் பக்கம் திரும்பி, ''மாமா! உங்கள் வாழ்வு நிம்மதியாகக் கழியட்டும், நான் சுசீலாவுடன் கூடிய சீக்கிரம் தனிக்குடித்தனம் போகிறேன்'' என்றான்.

ராஜு சலனமற்று, ''தியாகு! அதற்கு அவசியம் இல்லை! உன்னையும் யசோதையையும் நான் நம்புகிறேன்.... சுசீலாவின் மனம் சீக்கிரம் தெளிவடைய மட்டும் வழி செய்'' என்றார். யசோதைக்குப் போன உயிர் திரும்பியது. அவள் நன்றியுடன் தன் கணவரை நோக்கினாள்.

இந்த நேரத்தில் தியாகுவின் பியூன் வந்தான். அவன் தியாகுவை நோக்கி, ''இதோ அம்மா உங்களுக்கு ஒழிந்தநேரத்தில் தன்னை வந்து பார்க்கச் சொன்னாங்க'' என்றான்.

''இப்பவே எனக்கு ஒழிந்த நேரம் தான். இதோ போகிறேன்........'' தியாகு காலில் செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பி விட்டான்.

''நில்லுங்கள்!'' — சுசீலா கம்பீரமாக உத்தரவு போட்டாள்.

''என்ன சுசீலா ?''

''நீங்கள் அங்கு போக வேண்டாம். நாம் இன்று நாடகத்துக்குப் போகலாம்'' என்றாள் சுசீலா. **(தொடரும்)**

# திரைத் துணுக்குகள்

**பட விமரிசனம் :**

ஸிஸில் பி டெமில்லியின் தயாரிப்பில் முன்பு வெளி வந்த 'ஸாம்ஸனும் டிலைலாவும்' என்ற படத்தைப் பார்த்தவர்கள் தலையில் அடித்துக் கொள்கிற மாதிரியாக இப்போது 'ஸாம்ஸனின் மகன்' என்றொரு படம் திரையிடப்பட்டிருக்கிறது. இந்தப் படம் ஆரம்பமாவதற்கு முன்னால் பாரிஸில் தயாரான ஒரு குட்டித் திரைப் படத்தைக் காண்பிக்கிறார்கள். இதில் பேச்சு என்பதே கிடையாது. முக்கிய நடிகர்கள்: ஒரு பையன், ஒரு பூனை, ஒரு தங்க மீன், ஒரு குருவி இவ்வளவுதான். பையன் வளர்த்து வரும் மீனையும் குருவியையும் விழுங்கப் பார்க்கிறது பூனை. இந்தச் சிறிய கருத்தில் அழகான கதையோட்டத்தைப் புகுத்தியது மட்டுமல்ல; எத்தனையோ விதமான உணர்ச்சிகளைப் படம் பார்ப்போரிடம் அடுத்தடுத்து உருவாக்குகிறார்கள். அத்துடன் காமிராக் கலை நுணுக்கத்தையும் நன்றாக அனுபவிக்க வைக்கிறார்கள். அபாரம் போங்கள்! கொடுத்த காசுக்கு இந்தக் குட்டிப் படத்தைப் பார்த்தாலே போதும்; அப்புறம் வீட்டுக்குப் போய் விடலாம்!

**நடிகர் விமரிசனம் :**

சிவாஜியை ஞாபகப்படுத்துவது ஜொலிக்கும் கண்கள்; கணேசனை நினைவூட்டுவது தொந்தி. இன்றைக்குத்தான் ஒருவரை முதன் முதலாகச் சந்தித்தாலும், 'வீட்டில் எல்லாரும் சௌக்கியமா?' என்று அந்யோன்ய பாவத்துடன் பேசுகிற அன்பு உள்ளம். 'காலில் அடிபட்டு பிராக்சர் ஆகி விட்டதே; கால்கட்டை வைத்துக் கொண்டு படத் தயாரிப்பாளர்கள் தவிக்கப் போகிறார்களே!' என்று யாரேனும் சொன்னால் 'கால்தானே ஐயா போயிற்று? இன்னும் முக்கால் பாக்கி இருக்கிறதே!' என்று உடலில் உருப்படியாக இருக்கும் பகுதியைச் சுட்டிக் காட்டும் அமைதி. சுதந்திரக் கட்சிக்கு ரூ. 25,000 தருவதாக வாக்களித்துப் பிரபலம் அடைந்த பிறகு அதைக் கொடுக்காமலிருந்து முன்னை விட அதிகமாகப் பிரபலமடையும் சாமர்த்தியம். ஹாலிவுட் நட்சத்திரங்களுடன் உறவாடித் திரும்பிய பிறகும் தொந்தியைக் கரைப்பதில் சிரத்தை காட்டாத அளவுக்கு நடிப்பில் தன்னம்பிக்கை. 'நட்சத்திரங்களின் செல்வாக்கே திரையுலகில் மிகுந்திருப்பது நல்லதா?' என்ற கேள்விக்கு 'நல்லதல்ல; அந்நாட்களில் இருந்த சூழ்நிலையே சிறப்பானது' என்று தயங்காமல் உண்மை பேசும் தன்மை. ஒரே சமயத்தில் ஏராளமான படங்களில் நடிக்க ஒப்பந்தம் செய்துகொண்டு எது நல்லதல்ல என்று மனப்பூர்வமாகக் கருதுகிறாரோ அந்தச் சூழ்நிலையை வளர்த்துவிட உதவும் நெஞ்சுறுதி!



## உங்கள் குழந்தையின் நலமான வளர்ச்சியை அஜீர்ணம் தாக்காது பார்த்துக்கொள்ளுங்கள்

உங்கள் சிறு குழந்தை தவழவும், உட்காரவும், நிற்கவும், நடக்கவும் பயிலவேண்டும்; அத்துடன் உடல் எடையை இரட்டித்துக்கொள்ளவேண்டும் — எல்லாம் ஒரு வருஷ காலத்திற்குள்! நலமான வளர்ச்சியை ஓர் அற்ப அஜீர்ணம் கூட பாதிக்காமல் நீங்கள் பாதுகாக்கவேண்டாமா?

அஜீர்ணம் என்று எப்போது படுகிறதோ, உடனே உங்கள் குழந்தைக்கு அமிர்தாஞ்சன் கிரைப் மிக்சர் கொடுங்கள். அது இருந்தால் பல் முளைக்கும் பருவமும் எளிதாக அமைகிறது.

நினைவிருக்கட்டும். அமிர்தாஞ்சன் கிரைப் மிக்சர் புகழ்பெற்ற அமிர்தாஞ்சன் வலிநிவாரணி தயாரிப்போராலேயே செய்யப்படுகிறது. உங்கள் நம்பிக்கைக்கு ஏற்றது.




# அமிர்தாஞ்சன்
லிமிடெடின்
# கிரைப் மிக்சர்

அமிர்தாஞ்சன் லிமிடெட், மதறாஸ், பம்பாய், கல்கத்தா, புது டில்லி

# பணக்காரக் குடும்பம்

கிராமவாசி ஒருவன் தன் காதலியைக் கைவிட்டு ஒரு பணக்காரப் பெண்ணைத் தேடித் திருமணம் புரிந்து கொள்கிறான். சென்னையில் பெரிய தொழில் அதிபனாகி ஒரு குழந்தைக்குத் தந்தையுமான பிறகு மனைவியைச் சதிசெய்து கொலை செய்யத் திட்டமிடுகிறான். குழந்தை வேறொருவர் வீட்டில் வளர்கிறது. பிறகு பழைய காதலியை மணந்து கொள்கிறான். கிராமவாசியின் முதல் மனைவி சாகவில்லை என்பதுதான் திரைக் கதையின் 'சஸ்பென்ஸ்'.

அசோகன் வில்லனாக வந்து யார் குடியையும் கெடுக்காமல் நல்லவனாக வந்து நன்றாகவும் நடிக்கிறார். பெற்ற மகளிடமே தம் இழிசெயல்களைச் சொல்லிக் கண்ணீர் உகுக்கும்போது நம் மனமும் உருகுகிறது. தம் மகளை மறந்துவிடும்படி எம். ஜி. ஆரைக் கேட்டுக் கொள்ளும்போதும், அவர் மகளுக்கும் தமக்கும் உள்ள அன்பின் ஆழத்தை எம். ஜி. ஆர். எடுத்துரைத்ததும் நெகிழ்ந்து போய், அவருக்கே மகளை மணம் முடிக்க இசையும்போதும், அசோகன் 'அப்ளாஸ்' வாங்குகிறார். தகப்பனார் வேடம் அவருக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது.

எம். ஜி. ஆருக்கு ஆரம்பத்திலேயே சண்டை சான்ஸ் கிடைக்கிறது. காதலிக்க நேரம் இருப்பது போலவே, கண்ணீர் விட்டுக் கதறவும் நேருகிறது. காதலியோடு மழையில் நனையும்போதும், 'பாட்மிண்டன்' விளையாடும்போதும் மிகவும் உற்சாகமாக நடிக்கிறார். காதலைத் துறந்து மனம் கலங்கும் போது உருக்கமாக நடிக்கிறார்.

''வாடியம்மா வாடி, வண்டாட்டம் வாடி'' என்று பாடிக்கொண்டு பெண்களோடு 'சடு குடு' விளையாடுவதிலிருந்து கடைசி வரையில் சரோஜாதேவியின் நடிப்பு நன்றாகவே இருக்கிறது.

நாகேஷ் நான்கு பாத்திரங்களை ஏற்றிருக்கிறார். மகன், அப்பா, தாத்தா, குழந்தை! எல்லா வேடங்களிலும் நன்றாக நடிக்கிறார். அவர் வரும்போதெல்லாம் தியேட்டரில் ஒரே சிரிப்பும், ஆரவாரமும்தான்!

வில்லனாக வரும் ஆர். மனோகர் அந்தப் பாகத்தில் பண்பட்ட நடிகர். விழிகளை உருட்டி மிரட்டி நன்றாக நடித்திருக்கிறார்.

சக்தி கிருஷ்ணசாமி கதை, வசனம் தீட்டி யிருக்கிறார்.

ஸ்கூட்டர் காமெடி ஒன்றைச் சம்பந்தம் இல்லாமல் புகுத்திப் படத்தின் கலையைக் கெடுத்திருக்க வேண்டாம்.

ஜீப்பில், மலைப்பாதையில் மின்னல் வேகத்தில் ஓடிக்கொண்டே வில்லனும், கதா நாயகனும் நமக்கு அலுப்பு ஏற்படும் வரை சண்டை போடுகிறார்கள். இது தாங்க முடியாத கஷ்டம். அப்பொழுது கதாநாயகன் காலால் ஜீப்பை ஓட்டுவது கொஞ்சமும் சரியில்லை.

எம்.ஜி.ஆர். தன்னை உண்மையில் வெறுக்கவில்லை என்பதைச் சரோஜா தேவி தெரிந்து கொண்டுவிடுவதாக முன் காட்சியில் காட்டிவிட்டு, அடுத்த காட்சியில் எம். ஜி. ஆர். குடிகாரனைப் போல் நாடகம் ஆடுவதாகக் காட்டியிருக்க வேண்டாம்.

காதலில் தோல்வி கண்டால் வீணையை வைத்துக் கொண்டு கதாநாயகி பாடுவது ஆதிகாலத்து முறை. அதைக் கண்டு ரசிக்க முடியவில்லை.

''இதுவரை நீங்கள் பார்த்த பார்வை இதற்காகத்தானா... இப்படியென்று சொல்லியிருந்தால் தனியே வருவேனா?'' என்ற பாட்டை டி. எம். சௌந்தரராஜனும், பி. சுசீலாவும் பாடுகிறார்கள். இனிமையான பாட்டு. எல்லோரையும் பாட வைக்கும் பாட்டு. மற்றப் பாடல்களும் நன்றாகவே யிருக்கின்றன.

ராமண்ணாவின் டைரக்ஷன் நன்றாக இருக்கிறது. நீதி மன்றக் காட்சியைத் தவிர்த்தது, கதையைச் சிக்கலில்லாமல் தெளிவாகக் காட்டியது—இந்த இரண்டு அம்சங்களுக்காகவே அவரைப் பாராட்டலாம்.

பார்க்கக்கூடிய படம்தான். — காந்தன்



# கயல் விழி

அகிலன்

ஏழாம் அத்தியாயம்

## தவிர்க்க முடியா முடிவு

சுந்தர பாண்டியன் வெளியூருக்குச் சென்று வந்தவுடன் அங்கு தான் கண்டு கேட்ட விஷயங்களைத் தம்மிடம் கூறி மகிழப் போகிறான் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் கோப்பெருந்தேவியார். ஆனால் அவனுடைய போக்கில் திடீரென்று ஒரு மாறுதல் புலப்பட்டு விட்டது. அரசியாரிடம்கூட அவன் சரியாகப் பேசவில்லை. விரும்பிக் கேட்டபோதும்வேறெங்கோ நினைவாகப் பதிலளித்தான். உண்ணும் உணவிலும் அவனது நாட்டம் செல்லவில்லை என்பதை அறிந்துகொண்டார் அரசியார்.

பொழுது சாய்வதற்கு முன்பே படுக்கைக்குச் சென்றுவிட்டான். பலநாட்கள் ஓய்வு உறக்கமின்றி அலைந்த களைப்பாக இருக்கக் கூடும் என்று தம்மைத் தேற்றிக் கொள்ள முனைந்தார் கோப்பெருந்தேவி. என்றாலும் இனம்புரியாத துன்பமொன்று அவரை வாட்டத் தொடங்கியது.

அந்தப்புரத்துக்கு வந்த அரசரின் முகத்திலும் அரசியாருக்கு ஒரு மாறுதல் புலப்பட்டது. அவராகப் பேசுவதற்கு அஞ்சி இருந்தபோது, அரசரே சுந்தரபாண்டியனைப் பற்றி விசாரித்தார். கோப்பெருந்தேவியின் கண்கள் கலங்கின. "அரச குலத்தில்பிறந்தாலே பாசமும் பற்றும் நாளடைவில் தேய்ந்துவிடும் போலிருக்கிறது!" என்று நடந்தவற்றைக் கூறினார் தேவியார்.

"பாசமும் பற்றுதலும் ஒருபோதும் தேய்வதில்லை. அது வளர்ந்து பெரிதாகி நாடு முழுவதும் படரப் பார்க்கிறது. நாடு என்பது என்ன? பல வீடுகள் சேர்ந்ததுதானே? பறவைக்குச் சிறகு முளைத்த பின்னரும் அது கூண்டுக்குள் அடைபட்டுக் கிடக்க வேண்டுமெனத் தாய்ப் பறவை ஏங்குகிறது. பறவைக்குச் சிறகு எப்படியோ அப்படித்தான் ஆண் மகனுக்குச் சிந்தனையும். சுந்தரபாண்டியன் சிந்திக்கத் தொடங்கி விட்டான்" என்றார் பாண்டிய மன்னர்.

'நீங்கள் சிந்தனை செய்யுங்கள்; சிந்தும் கண்ணீர் பற்றிக் கவலையுறுகிறீர்கள்' என்று தமக்குள் கூறிக்கொண்டார் கோப்பெருந்தேவி.

உணவு முடிந்தபின்னர் இரவில் ஓய்வு கொள்ளவில்லை பாண்டியர். சுந்தர பாண்டியனின் பள்ளியறைக்குச் சென்று பஞ்சணையில் அவன் நித்திரையுடன் போராடிக் கொண்டிருப்பதைக் கண்ணுற்றார். அவன் உளறினான்: 'முடியாது. முடியாது! இழிவைப் பொறுப்பதைவிட நாம் அழிவைப் பொறுப்போம்!.... போர்!...வெற்றி!...வீர மரணம்!'

மெல்ல அவனது தோளில் கரம் வைத்தார் அரசர். அவன் விழித்துக் கொள்ளவில்லை. ஆனால் உறக்கத்தில் அவன் பேசிய பேச்சு நின்றது. தாமே சென்று சாளரத்தை மறைத்திருந்த பூந்துகிலை ஒதுக்கிவிட்டு, வைகையின் குளிர்ந்த காற்றைக் கூடத்தினுள் வரவேற்றார். சாளரத்தின் வழியே பார்த்தபோது மங்கலான இருளில் விழுப்பரையர் வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

எதிர் சென்று வரவேற்றுத் தமது தனி அறைக்கு அழைத்துச் சென்றார். விழுப்பரையரை அரசர் தமது அந்தப்புர மாளிகைக்கு அழைத்





இருந்தாரென்றால், அவர்களது அந்தரங்கப் பேச்சில்இரவு பகலாகிவிடுமென்பதை அரசியார் முன்னமே உணர்ந்தவர்.

'ஏதோ ஒன்று நடக்கப் போகிறது. அது நல்லதாக இருக்க வேண்டுமே!' என்று ஆலவாய் அண்ணலை வேண்டிக் கொண்டு தமது பணிப்பெண்களுக்கிடையில் அவர் கவலைகளை மறக்க முயன்றார்.

அரசரின் அந்தப்புரத் தனி மாளிகையில் சிறியதொரு தூண்டா மணி விளக்கு மட்டுமே சுடர் வீசிக்கொண்டிருந்தது. தனியானதோர் ஆசனத்தில் அமரப்போன விழுப்பரையரை, நீண்டு விசாலமாக இருந்த தமது இருக்கையிலேயே உடன் இருக்கும்படி செய்தார் அரசர். ''நீங்கள் சிறுபொழுதாவது கடமைகளை மறந்து ஓய்வு கொள்ளவேண்டும் என்பதற்காகவே உங்களுடைய மாளிகைக்கு அனுப்பி வைத்தேன். ஆனால் உங்களுடைய உறங்கா விழிகள் உங்களைக் காட்டிக் கொடுக்கின்றன!'' என்று கூறிச் சிரித்தார் பாண்டியர்.

''அரசர் அவர்களது அகம் கனிந்த சொல்லுக்கும் முகம் கனிந்த மலர்ச்சிக்கு முன்ன ஆற்றலே என் சோர்வுகள் அனைத்தையும் நீக்கிப்புத்துயிர் தருகிறது. ஓய்வாலும் உறக்கத்தாலும் பெற முடியாத பேரின்பம் பெறுகிறேன், நான்.''

சொல்லைத் தெய்வமெனப் போற்றும் பண்புள்ள புலவராகவும் விழுப்பரையர் இருந்ததால், இன்சொல்லால் எப்போதும் அவரை இன்புறச் செய்வதில் அரசர் தயங்குவதில்லை. அதனால் பன்மடங்கு சொல்லின்பம் பாண்டியருக்கே திரும்பிக் கிடைத்தது. உயிரோம்பும் அமுதமல்லவா இனிமை நிறைந்த மொழி!

மன்னர் குலோத்துங்க சோழரின் ஓலையை எடுத்து விழுப்பரையரிடம் கொடுத்து, "நாம் உடனடியாக முடிவு செய்தாக வேண்டும். நாம் இப்போது எடுக்கும் முடிவில்தான் இந்த நாட்டின் வாழ்வினைப் பயனே அடங்குவதாக இருக்கும்" என்றார் பாண்டியர்.

விழுப்பரையருக்கு அனறையப் பகலிலேயே, சுந்தரபாண்டியன் தன்னைச் சிறைவிடும்படி பணிந்து விட்டபோதே, ஓலையின் முழு விவரங்களும் தெரிந்து விட்டன.

"தங்களுக்கு என்ன தோன்றுகிறது?" என்றார் பாண்டியர்.

"முகாந்திரம் என்னவென்று தெளிவாக இப்போது விளங்குகிறது. சோழ சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்திகள் நெஞ்சத்தில், இதுவரை அவரைக் கண்டு அஞ்சி ஒளிந்து கொண்டிருந்த அச்சம் இப்போது நன்றாகக் குடிபுகுந்துவிட்டது. சாம்ராஜ்யத்து இளவரசன் இராஜராஜவின் ஆண்மையற்ற தன்மையையும், அதனால் எதிர்காலத்தில் சோழ சாம்ராஜ்யத்துக்கு நிகழவிருக்கும் இன்னல்களையும் அறிந்து அஞ்சுகிறார். அதைத் தடுப்பதற்கான அவரது கடைசி முயற்சி இது."

தமது உள்ளத்தில் உள்ளவற்றை அப்படியே விழுப்பரையரும் பிரதிபலிப்பதாகத் தோன்றியது பாண்டியருக்கு. அன்பு நிறைந்த நெஞ்சங்களில் ஒன்றாக உணர்வு பிறப்பது போலவே அறிவு நிரம்பிய சிந்தைகளிலும் எண்ணங்கள் மலர்வதுண்டல்லவா?

"சக்கரவர்த்திகளுக்குத் தமது இளவரசனைப் பற்றிய கவலையோடு, நம்முடைய இளவரசனைப் பற்றிய கவலையும் ஏற்பட்டு விட்டது. எப்படித்தான் சுந்தரபாண்டியனை இனம் கண்டுகொண்டார்களோ, தெரியவில்லை."

"தாழை மலர்ந்தால் அதன் மணத்தை நம்மால் சிறைவிட்டு வைக்க முடியாது. மேலும் ஒற்றர்கள் பலர் இங்கு நடமாடுகிறார்கள். நம்முடைய அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபருக்கே நமது இளவரசரின் ஆற்றல் அச்சம் தருகிறது."

குலசேகர பாண்டியரின் உள்ளத்தில் சுரீரென நெருஞ்சி முள் பாய்வது போலிருந்தது. சுந்தர பாண்டியனைப் பற்றிய செய்திகள் அமைச்சரிடமிருந்து வந்தாலல்லாது, குலோத்துங்கர் இந்த முடிவுக்கு வந்திருக்க மாட்டார் என்று அவர் ஊகித்துத்தான் வைத்திருந்தார்.

விழுப்பரையர் மேலே கூறினார்: "குலோத்துங்கர் இலக்கியங்களை விரும்பிக் கற்பவர். புலவர்கள் சூழ இருப்பவர். 'பகைத் திறனை அழிக்க வேண்டுமானால் முதலில் அதன் செருக்கை அழிக்க வேண்டும். அதுவும் முட்செடி இளம் பயிராக இருக்கும்போதே அதனைக் களைந்துவிட வேண்டும்; வளர்ந்த பின்பு களைய நினைத்தால் அழிவு தாம் தம் செய்வோருக்குத்தான்' என்ற குறள்தான் இந்த விழிப்பை அவருக்குக் கொடுத்திருக்க வேண்டும்."

சொற்களை ஏற்றுக்கொண்டு ஆலோசித்த பாண்டியர், "யாருடைய விழிகளிலிருந்து இளவரசன் தப்பி வளர்ந்தால் நலமென்று நினைத்தேனோ அது நடைபெறவில்லை. இப்போது இரண்டு முடிவுகளில் எதைச் செய்தாலும் அது அவனைப் பாதிக்கும்; பாண்டிய நாட்டின் எதிர்காலத்தைப் பாதிக்கும்" என்றார்.

"பாண்டியப் பதியின் எதிர்காலம்!" என்று நீண்ட நெடுமூச்செறிந்து மௌனத்தில் மூழ்கினார் விழுப்பரையர். பாண்டியரும் தம்முள் மூழ்கினார். பின்னர் அந்த மௌனத்தை இருவராலும் பொறுக்க முடியவில்லையோ, அல்லது விழுப்பரையர் தீர்க்கமான முடிவுக்கு வந்து விட்டாரோ தெரியவில்லை. அரசரை நிமிர்ந்து பார்த்தார்.

"போருக்கு நாம் சித்தமாகிவிட வேண்டும்!" என்று அமைதியோடு கூறினார்.

"போர் என்றால் சுந்தரபாண்டியனைத் தடுத்து நிறுத்திவிட்டு நாம் போரிட முடியாது. அப்படிச் செய்தால் அவன் செருக்கும், வீரர் செருக்கும் மக்களின் ஆர்வமும் ஒன்றாக அழியும். இந்தப் போரில் எப்படியும் சுந்தரபாண்டியனைத் தனியே இழுத்துக் கொன்றுவிடுவார் குலோத்துங்கர். குலோத்துங்கர் என்றாலே குலம் விளங்க வந்தவர் என்றுதானே பொருள்? சோழர் குலம் விளங்கப் பாண்டியர் குலமழித்து மதுரைக்கு முடிவுகட்டி 'மதுராந்தகர்' ஆன பரம்பரை அது. போரென்றால் நாடும் அழியும்; அதன் எதிர்காலக் காவலனும் அழிவான்."

"ஆனால் நம்பிக்கை அழியாது" என்றார் விழுப்பரையர். "சுந்தர பாண்டியரின் நலனைப் பாண்டியப்பதியின் நலனோடு சேர்த்துத்தான் நாம் எண்ணுகிறோம். கோழையாக அவரை மாற்றி அவர் எண்ணத்தை அழிக்க நாமே துணை செய்வதை விடப் போரில் அவர் உயிர் அழியுமானால் கூட நாம் துணிந்துவிடுவதுதான் நலம்."

குலசேகர பாண்டியரின் உள்ளம் தீப்பற்றி எரிந்தது. ஆனால் ஆலோசனை கூறுபவரோ தம்மைவிட உயிருக்குயிராகச் சுந்தரபாண்டியனைப் போற்றி வளர்த்தவர். விழுப்பரையர் இப்படிக்

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்...இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக் கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் கிடைக்கும் பாமாலிவ் டால்க் டிலக்ஸ்—
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

FT.G.7 TAPL

கூறுது வேறு யார் கூறியிருந்தாலும் கூறியவரின் தலை இதற்குள் தரையில் உருண்டிருக்கும்.

கண்களை மூடித் திறந்தார் அரசர். "சரி! போர்தான் முடிவு! நீங்கள் சென்று வரலாம்!" என ஆவேசம் கொண்டவர் போல் அவருக்கு விடை கொடுத்தார். 'போர்தான் முடிவென்றால் பாண்டிய நாட்டின் முடிவுதான் முடிவு! சுந்தரபாண்டியனின் வணங்கா முடி குலோத்துங்கனின் காலடியில் துண்டிக்கப்பட்டு விழ்வதுதான் முடிவு!' என்று உள்ளம் அலைபொங்க ஆரம்பித்தது. அஞ்சா நெஞ்சம் விம்மி விம்மிக் குலுங்கியது.

விழுப்பரையரின் நடமாட்டத்துக்கு அந்த அரண்மனையில் எப்போதுமே தடை இருந்ததில்லை. நேரே அவர் சுந்தரபாண்டியன் படுத்திருந்த பள்ளியறைக்குச் சென்றார். குனிந்து அவன் முகத்தை உற்று நோக்கினார். கண்ணீரை அடக்க முயன்றார்; முடியவில்லை. கண்ணீரின் நனைப்பினால் அவன் விழித்துக் கொண்டு விடக்கூடாதே என்று விலகி வந்தார்.

அந்தக் கூடத்திற்குள் அவரது விழிகள் எதையோ தேடி அலைந்தன. தம்மை யாராகிலும் கவனிக்கிறார்களா என்பதையும் பார்த்துக் கொண்டார். களவு நடத்த வந்த கள்வர் போன்று அங்கிருந்த சில பொருள்களை எடுத்து மறைத்துக் கொண்டு வெளியில் நடந்தார். கண்ணுறங்காமல் வெளியில் நின்ற காவலர்கள் அவருக்குச் சிரம் தாழ்த்தி வணக்கம் தெரிவித்தார்கள். அவர்களுடைய கண்களில் தாம் எடுத்துச்செல்லும் பொருள் தட்டுப்பட்டு விடக் கூடாதே என்ற பரபரப்போடு விரைந்தார் அவர்.

தமது செந்தமிழ்ச் சொல்லாலும் செஞ்சோற்றுக் கடமை உணர்வாலும் அந்த அரண்மனைத் தலைவரின் உள்ளம் கவர்ந்த அந்தக் கள்வர், அரசர் தவிர வேறு யார் முன்பும் என்றும் சிரம் தாழ நடந்ததில்லை. ஆனால் அன்றைக்கோ அவருடைய குதிரையின் மீது தாவி ஏறும் போதுகூடப் பொருள் திருடிய கள்வனைப் போலத்தான் நடந்து கொண்டார்.

சந்தடியற்ற மதுரை நகரத்தின் தெருக்கள் வழியே, நகரத்துக் காவலர்களின் குரலோசைகளைக் கேட்டவாறே அவர்களுடைய கண்களுக்குப் படாமல் இருளைக் கிழித்தார் விழுப்பரையர்.

## எட்டாம் அத்தியாயம்

# ஐம்படைத்தாலி

**கூ**ரிய விழுப்பரையரின் சிறுவிடிவிளக்கு அவரது வரவு நோக்கித் துடிதுடித்துக் கொண்டிருந்தது. அவரது மனைவியார் திருவுடைத் தேவி இன்னும் கண்ணுறக்கம் கொள்ள வில்லை. பல நாட்களாகத் தலைவர் மதுரையில் தங்க வில்லையாதலால் இரும்பி வந்தவுடன் அவரிடம் முக்கியமான குடும்பச் செய்திகளைப் பேச வேண்டி யிருந்தது. இரும்பி வந்தவரோ உடனடியாக அரண்மனைக்கே சென்று விட்டார்.

இரவு எவ்வளவு நாழிகையானாலும் அவரிடம் தனித்துப் பேசி விட்டுத்தான் உறங்க வேண்டும் என்ற பிடிவாதத்துடன் காத்திருந்தார் திருவுடைத் தேவி. விஷயம் மிகவும் முக்கியமானது; அவர்களுடைய ஒரே புதல்வனின் திருமணத்தைப் பற்றிய விஷயம். நெடு நாட்களாகவே அவர் அவனுடைய மனப் போக்கை அறிந்து கொள்ள முயற்சிசெய்து வந்தார். அண்மையில்தான் அது சாத்தியமாயிற்று.

அவர்களுடைய குமாரன் ஆலவாய் நம்பி பாண்டியரின் ஏழகப் படையில் பணியாற்றி வந்தான். ஐந்நூற்றுவர் படைக்குத் தலைவனாகும் வாய்ப்பு மிகவும் இளமைப் பருவத்திலேயே அவனுக்குக் கிடைத்து விட்டது. நாட்டில் போர்களும் இல்லை; வயதும் காளைப் பருவம்; அன்னையாரின் வற்புறுத்தலுக்குச் செவி சாய்க்காமலே, சிரித்து மழுப்பியவாறே தனக்குத் திருமணத்தில் நாட்டமில்லை என்று கூறி வந்தான்.

ஆனால், நாட்டமில்லை என்று அவன் கூறியது நாணத்தினால்தான் என்பதை எப்படியோ கண்டுபிடித்து விட்டார் திருவுடைத் தேவி. அவனுடைய நாட்டம் வேறெங்கோ இருந்தது. நாட்டமில்லாதவன் நள்ளிரவு வேளைகளில் வீட்டை விட்டுச் செல்வது ஏன்? ஏதோ ஏக்கம் கொண்டவன் போல் உணவு மறந்து, உறக்கம் துறந்து, தனிமையை நாடத் தொடங்கி யிருப்பது ஏன்? காரணம் அவருடைய காதுக்கு எட்டி விட்டது.

கானக் குறத்தியின் காதலனை குமரன் உறைந்த திருப்பரங் குன்றத்தில் ஆலவாய் நம்பியை அப்படி உருக்குலைத்த ஒரு பேதைச் சிறுமி அவனோடு கனவில் ஆடி, வாழ்ந்து வந்தாளாம். கண்களால் சிரித்து, கள்ளப் பேச்சில் மகிழ்ந்து, கண்ணீர் சிந்திப் பிரிவதையே அவன் வழக்கமாகக் கொண்டி

ருந்தாளாம். கொற்கைத் துறைமுகத்தில் வாணிபம் செய்து வந்த பெருங்குடி வாணிபரின் மடமகளாம் அவள். திருப்பரங் குன்றத்துக் காட்டிடையே நம்பிக்காகக் குதூகலத் துடிப்போடு காத்து நிற்பதும், பிரியும் போது நீராயுருகி நெடுமூச்செறிந்து அவனை வாட்டி வதைப்பதுமே அவளுடைய அன்றாடச் செயல்களாம்.

திருவுடைத் தேவியும் தமது குமாரனுக்குத் தெரியாமலேயே அந்தப் பெண்ணின் குடும்பத்தினரைப் பற்றிக் கேட்டறிந்தார். பெண்ணின் குண இயல்புகளையும் தமது மூத்த பணிப் பெண் மூலம் கண்டு கொண்டார். ஒத்த குடி, ஒத்த மனம், உயிருக்குயிராகும் உணர்வுக் கலப்பு! வேறென்ன வேண்டும்?

அன்னையார் கேட்ட போது நாணித் தலை குனிந்தான் நம்பி. வீரத் தலைமகனை அவன், மன்னராணையைத் தவிர வேறு எதற்கும் தலை வணங்காதவன், தன் களவுச் செய்தியைத் தாயிடமிருந்து கேள்வியுறவே பிடிபட்ட கள்வனாக மாறினான். வேர்த்துக் கொட்டியது அவன் முகம். பிறகு அன்னையாரின் ஆதரவு கண்டவுடன் ஓடிச் சென்று பஞ்சணையில் முகம் புதைத்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். சிட்டாய்ப் பிறந்திருந்தால் சிறகடித்துச் சென்று அவள் செவிகளில் அந்தக் கணமே இன்பகீதம் இசைத்திருக்கலாமே என்று அவன் பூரித்தான்.

அன்று மாலைச் சந்திப்பின் போது, ''இனி நான் வந்து தனியே உன்னைக் காணப் போவதில்லை !'' என்று மிடுக்காகக் கூறினான்.

பதறித் துடித்த அந்தப் பசுங் கொடியோ, ''இப்படி ஓர் அவச் சொல் சொல்கிறீர்களே!'' என்று கலங்கினாள். அவள் துடித்த துடிப்பை யெல்லாம் ஆவல் நிறைந்த விழிகளால் பருகி விட்டு, ''நமது களவு நிலை தெரிந்து விட்டது; இனி மணந்துகொண்டு கற்பு நெறி காக்க வேண்டிய காலம் வந்து விடும் போலிருக்கிறது!'' என்றான் பெருமையோடு.

''மெய்தானா? உங்களுடைய இந்தச் சொல்லையாவது நம்பலாமா?''

''ஆமாம், இனிமேல் நான் உன்னைத் தனியே வந்து இங்கு காணப் போவதில்லை ! நமது களவு வெளிப்பட்டு விட்டது. விரைவில் என் அன்னையாரும் தந்தையாருமே உன் வீடு தேடி வருவார்கள்! உன் பெற்றோர்களைக் கண்டு பேசுவார்கள். அப்போது நீ ஏது மறியாக் கள்ளி போல் அவர்கள் எதிரில் நாணிக் கண் புதைப்பாய்!''

அப்போதே அவ்விடத்தே நாணிக் கண் புதைத்தாள் உய்யவந்தாள். அவளை அந்தக் கணமே அள்ளியணைத்துச் சுமந்து வந்து தன் அன்னைக்கு முன்பு நிறுத்த வேண்டும் என்று தோன்றியது இளைஞனுக்கு. 'பொறு நெஞ்சே, பொறு ! தந்தையார் திரும்பி விடுவார்; அன்னையார் அயர மாட்டார்; பொறு — நெஞ்சே, பொறு!' என்று தன்னைத் தேற்றிக் கொண்டான் அவன்.

''களவுக் காலம் நீண்டு விட்டதே என்று இனிமேல் நீ என்னைக் குறைகூற மாட்டாயல்லவா?'' என்று கேட்டான்.

''சொல் செயலான பிறகே உங்களை நம்ப முடியும்!'' என்றாள் அவள். ''என்று வருவார் உங்கள் தந்தை? காலமெல்லாம் காத்திருந்தேன். இனிமேல் இந்த நற்செய்தி கேட்டபிறகு கணப் பொழுதும் காத்திருக்க முடியாது போல் தோன்றுகிறது.''

அவள் கண்களில், குரலில், மூச்சில் வெம்மை நிறைந்த கண்ணீர் கலந்தது. வீரன் அந்தக் கண்ணீர்கண்டு கோழையாகிப் பின் வாங்கினான். தன்னுடைய ஏக்கம் பெரிதா, தனக்கு அதை அளித்த அவளுடைய ஏக்கம் பெரிதா என்று ஆலவாய் நம்பிக்கு விளங்கவில்லை.

தனது மாளிகைக் கூடத்தில் பஞ்சணையில் படுத்துறங்கிய ஆலவாய்நம்பி, கனவுலகில் அந்தக் கள்ளி உய்யவந்தாளோடு மெய்ம் மறந்து உலவிக் கொண்டிருந்தான். உறக்கம் கலைந்தால் கனவு கலையுமோ என்ற அச்சத்தோடு அந்த ஆனந்த உலகின் இன்பங்களை யெல்லாம் அவன் கண்ணுறக்கத்திலேயே காண விழைந்தான்.

கதவு தட்டப்படும் ஓசை அவன் தலையில் அடித்தாற்போல் கேட்டது. அன்னையாரின் சிலம்பொலி வீட்டின் பின்புறத்திலிருந்து ஒலித்து நெருங்குவதைச் செவியுற்றான். தாயார் வந்து கதவைத் திறக்கும் வரையில் அவனால் பொறுக்க முடியவில்லை. தந்தையாரிடம் அவன் அன்னை அன்று எதைப் பேசுவார் என்று அவனுக்குத் தெரியும். ஆகவே பஞ்சணையிலிருந்து துள்ளி யெழுந்து ஓடி வந்தான். நாணித் தலை குனிந்தவாறே கதவின் தாழைத் திறந்துவிட்டு ஒதுங்கி நின்றான். அதற்குள் திருவுடைத் தேவியும் கதவருகே வந்து விட்டார்.

தாயும் தனயனும் அங்கே ஒன்றாக வந்து நிற்கும் காட்சியை விழுப்பரையர் சிறிதும் எதிர்பார்க்க வில்லை. விடிவிளக்கின் ஒளி கூடத்திலிருந்து அவர் முகத்தில் விழுந்தது. அதைக் கண்டவுடனேயே திருவுடைத்தேவியும் துணுக்குற்றார். ஆலவாய் நம்பியோ தனது

பூரிக்கும் உள்ளச் சுமையால் தன் தந்தையைக் கூட ஏறிட்டுப் பார்க்க வெட்கமுற்றவனாய்த் தலை குனிந்து நின்றான். விழுப்பரையரின் விழிகள் பெரும் பசியுற்றவை போல் அவனை உச்சி முதல் உள்ளங்கால் வரை உற்றுப் பார்த்தன. அவரது உடலும் நடுங்கியது. கையில் பற்றியிருந்த சிறு மூட்டை அவரையறியாது கீழே விழுந்தது.

"ஐயா!" என்று குனிந்து சென்று அதை வாரி எடுத்தான் ஆலவாய் நம்பி.

"எடுத்துச் செல்; அது உனக்குத் தான்...!"

ஆலவாய்நம்பி மூட்டையுடன் தனது அறைக்குள் சென்றான். படுக்கை மீது அமர்ந்து தனிமையில் அதைப் பிரித்துப் பார்த்தபோது அவனுக்கு வியப்பு மிஞ்சியது. அவனுடைய திருமணச் செய்தியை ஊகித்தறிந்து மணக் கோலத்தில் அணிவிப்பதற்காகப் புத்துடைகள் வாங்கி வந்திருக்கிறாரா? பித்தேறி யிருந்த அவனுக்கு யாவுமே அவன் கனவைச் சுற்றியே படர்ந்தன. உடனே அவற்றை அணிந்து கொண்டு தன்னை அழகு பார்த்துக் கொண்டான். 'அடடா! இளவரசு போலன்றோ இருக்கிறது. இப்போது! இருக்கட்டும்; என் இளவரசிக்கு முன்னால் இதே தோற்றத்துடன் போய் நின்று அவளை மயங்கி விழச் செய்கிறேன்!'



அவன் பஞ்சணையில் நெஞ்சிழந்து மயங்கி வீழ்ந்தான்.

விழுப்பரையரின் முகக் குறிப்பைக் கண்டு வாய் திறக்கவும் அஞ்சினாள் திருவுடைத்தேவி. உணவு கொள்வாரோ மாட்டாரோ என்று ஊசலாடியது அவள் மனம். அரண்மனைக்குச் செல்வதற்கு முன்பும் அவர் உண்ணவில்லை. ஆனால் விழுப்பரையரோ திருவுடைத் தேவியைத் திருப்தியுறச் செய்வதற்காக உணவு கொள்ள முனைந்தார். தம்மிடம் துணைவியார் தயக்கமின்றிப் பேசலாம் என்பது போல் தமது முகத்தில் குழைவு காட்டிக் கொண்டார். அன்போடு தமக்குப் பாலும் பழமும் தாம்பூலமும் கொண்டு வரச் செய்தார்.

திருவுடைத் தேவிக்குத் துணிவு பிறந்தது. மெல்ல மெல்லத் தமது குரலை இழைத்து, இனிதாக்கிக் கொண்டு, கண்களில் கனிவு பொங்கச் செய்து கொண்டு, மௌனமான பணி விடைகளுக்குப் பிறகு தமது ஆவலை வெளியிடத் தொடங்கினாள். ஆலவாய் நம்பியின் ஆவலைத் தம் ஆவலுடன் சேர்த்துக் கொண்டு, அவனுடைய திருமணம் பற்றிப் பேசினாள். நடந்தவற்றை யெல்லாம் வெளியிட்டு, அவளது அன்புக்குரியவள், பண்பு மிகுந்தவள் என்றும் கூறினாள்.

விழுப்பரையர் விருப்பத்தோடு அனைத்தையும் கேட்டுக் கொண்டார். தமது மனைவியின் ஆர்வமும், புதல்வனின் துடிப்பும் அவருக்குப் புலப்பட்டு விட்டன.

"நமக்கோ ஆலவாய் நம்பி ஒரே புதல்வன். அவனுடைய விருப்பமும் ஏற்ற விருப்பமாக இருக்கிறது. உய்யவந்தாள் நல்ல பெண். நம்முடைய குலம் விளங்கவரும் பேரக்குழந்தையை எடுத்து நாம் கொஞ்சி மகிழ வேண்டாமா? மதுரை மாநகர் சிறக்க நாம் இந்தத் திருமணத்தை நடத்த வேண்டும்... நாளைக்கு ,மிகவும் நல்ல நாள். கணிதம் பார்த்து வைத்திருக்கிறேன்; நாம் இருவரும் அந்த வணிகர் வீட்டுக்குச் சென்று குறிப்பு உணர்த்தி வருவோமா?" திருவுடைத்தேவி பணிவோடு பேசினாள்.

விழுப்பரையரின் விழிகள் அவரையறியாமலே நீர்த் திரையிட்டன. கலக்கம் காணுக் கண்கள் தமது காதல் மனைவியின் முன்பே கலங்குவது அவருக்கே சிறிதும் பிடிக்கவில்லை. மெல்ல அவற்றைத் துடைத்து விட்டுக் கொண்டார். ஆலவாய் நம்பி அவனுடைய கூடத்தில் நன்றாக உறங்கியிருப்பான் என்ற நினைவு அவருக்கு.

மனைவியின் சொற்களுக்கு மறுமொழி எதுவுமே கூறாமல், "பிள்ளைப் பருவத்தில் நம்முடைய நம்பிக்குச் செய்து சூட்டிய ஐம்படைத்தாலி பாதுகாப்பாக இருக்கிறதல்லவா?" என்று கேட்டார்.

திருவுடைத் தேவிக்கு இப்படி அவர் கேட்டது சிறிது கூடத் தொடர்பில்லாத விஷயமாகத் தோன்றியது. ஆனாலும் அவர் சொல்லுக்கு எதிர்ச் சொல் பேசி அவள் நா பழகியதில்லை.

"பேழையில்தான் இருக்கிறது" என்றாள் திருவுடைத்தேவி. (தொடரும்)






# கள்ளக் கடத்தலில் வைரக்கற்கள்

பிரிட்டிஷ் கடற்படையில் துப்பறியும் இலாகாவில் பணியாற்றியவர் ஐயான் ப்ளெமிங். ஆனால் கடற்படையில் அவர் செய்த சேவைகளைக் காட்டிலும் ஜேம்ஸ் பாண்ட் என்ற துப்பறியும் வீரனைத் தமது கற்பனையில் உருவாக்கி லட்சோப லட்சம் வாசகர்களிடை உலவ விட்டதால் அதிகமாகப்புகழ்பெற்றவர்.

ஒரு நாள் ஐயான் ப்ளெமிங்கை அவரது நண்பர் ஒருவர் டெலிபோனில் அழைத்தார். ''ஸர் பேர்ஸியை ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டார்.

ஐயான் ப்ளெமிங்குக்கு அவரை ஞாபகம் இருந்தது. ஸர் பேர்ஸியும் துப்பறியும் இலாகாவில் பணியாற்றியவர்தான். உத்தியோகத்திலிருந்து ஓய்வுபெற்றுவிட்ட அவரது அனுபவத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ள டி. பீர்ஸ் என்ற வைரச் சுரங்கக் கம்பெனி முடிவு செய்தது. கள்ளக் கடத்தலில் வருஷந்தோறும் பறிபோகும் பத்து மில்லியன் பவுண்டு மதிப்புள்ள வைரங்களைப் பற்றி விரிவான ஆராய்ச்சி நடத்தப் பேர்ஸியைப் பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தது. இதை ரகசியமாக வைத்திருக்க எண்ணிய போதிலும் எப்படியோ இதைப் பற்றிய தேரஷ்யங்கள் சில பத்திரிகைகளில் வெளியாகி விருந்தன.

இது ஐயான் ப்ளெமிங்குக்கு நினைவிருந்தது. ஆகவே டெலிபோன் செய்த நண்பரிடம் மிகவும் ஆர்வத்துடன் பேச்சைத் தொடர்ந்தார். அந்த நண்பர் சொன்னார்:

''ஸர் பேர்ஸி மேற்கொண்ட வேலை இப்போது முடிந்து விட்டது. அவருக்கு உதவியாக அவரது திட்டங்களை நிறைவேற்றி வைத்த ஜான் ப்ளெய்ஸ் என்பவர் தமது அனுபவங்களை உங்களிடம் கூற விரும்புகிறார். உங்களுடைய துப்பறியும் நாவல்கள் பலவற்றை அவர் படித்திருப்பதால் இந்த உண்மைக் கதையையும் நீங்கள் அழகாக எழுத முடியும் என்று நம்புகிறார். நீங்கள் என்ன சொல்கிறீர்கள் ?''

கரும்பு தின்னக் கூலியா வேண்டும் என்பது போல் உடனே ஒப்பி விட்டார் ஐயான் ப்ளெமிங். (படத்தில் காணப்படுபவர்)

ஜான் ப்ளெய்ஸை அவர் வடமேற்கு ஆப்பிரிக்காவில் மொராக்கோ தேசத்தில் டான்ஜீர் நகரத்தில் சந்தித்தார்.

ஐயான் ப்ளெமிங் தங்கியிருந்த ஹோட்டல் அறையில் அமர்ந்தோ அல்லது காலாற நடந்தபடியோ அல்லது இரவு கேளிக்கை விடுதிகளில் உட்கார்ந்தபடியோ அவர்கள் பல நாட்கள் பேசினார்கள்.

ஜான் ப்ளெய்ஸ் தாம் பல காகிதங்களில் எழுதி வைத்துக் கொண்டிருந்த குறிப்புகளை அடிக்கடி படித்துப் பார்த்துக்கொண்டு விஷயங்களைச் சொன்னார். ஒவ்வொரு காகிதத்தையும் அதன் உபயோகம் முடிந்ததும் கிழித்து விடுவார். ஆனால் தாம் கூறிய வரலாறுகளில் சிற்சில பெயர்களை மட்டும் மாற்றிச் சொல்லுவார். ஜான் ப்ளெய்ஸ் என்பதே அவரது பல புனைபெயர்களில் ஒன்றுதான்! பக்காத் திருடர்களைத் தவிர வேறு யாருக்கும் எந்த விதத்திலும் சிறு துன்பம்கூட அளிப்பதாகப் புத்தகம் அமைந்துவிடக் கூடாது என்பதில் ஜான் ப்ளெய்ஸ் மிகுந்த சிரத்தை காட்டினார். கள்ளக் கடத்தல்காரர்களின் திருட்டுத்தனம் கண்டுபிடிக்கப்பட்டுப் புத்தக உருவில் அந்த விவரங்கள் வெளியாவதுடன் உலகிலுள்ள அனைவரும் அறிகிறமாதிரி அவர்கள் பெயர்களைப் பகிரங்கப்படுத்தி விடுவதைவிட அவர்களுக்கு வேறு பெரிய தண்டனை ஏதும் அளிக்க முடியாது என்பது ஜான் ப்ளெய்ஸின் கருத்து. ஆகவேதான் அவர் ஐயான் ப்ளெமிங்கிடம் மனம் விட்டுப் பேச முன்வந்தார்.....

''பொதுவாக வைரக் கள்ளக் கடத்தலில் ஈடுபட வேண்டும் என்று மனிதர்களைத் தூண்டும் சக்தி எது?'' என்று கேட்டார் ஐயான் ப்ளெமிங்.

''இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஆப்பிரிக்காவில் பல புதிய வைரச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்ட போது போட்டாப் போட்டியில் வைரங்களின் விலை கடகடவெனக் கீழே இறங்கி விட்டது. பிறகுதான் சுரங்க நிர்வாகிகள் விழித்துக் கொண்டு ஒருவருக்கொருவர் அனுசரணையாகப் போகத் தீர்மானித்தார்கள். வைரச் சுரங்கங்களை நிர்வகிக்கும் கம்பெனிகள் வைரங்களைத் தாங்களே நேரடியாக வியாபாரிகளிடம் விற்று விடுவதில்லை. வைர 'ஸிண்டிகேட்'தான் எல்லாச் சுரங்கங்களின் வைரங்களையும் வாங்கி ஒரே நிர்ணய விலையில் பல வியாபாரிகளுக்கு

விற்கிறது. இதனால் வைரங்களின் மதிப்பு குறையாமல் பாதுகாக்கப்படுகிறது.

"ஆனால் கடந்த பத்து ஆண்டுகளில் கள்ளச் சந்தையில் விற்கப்படும் வைரங்களின் விலை மிக அதிகமாகி யிருக்கிறது. போர்த் தளவாடங்களைச் செய்து குவிக்கும் போட்டியில் ஈடுபட்டுள்ள அமெரிக்கா, ருஷ்யா, சைனு ஆகிய நாடுகளில் தொழில் துறைகளுக்குத் தேவையான வைரங்களுக்குக் கிராக்கி மிகவும் அதிகமாகி யிருக்கிறது. ஆகவே கள்ளக் கடத்தலிலும் கள்ளச் சந்தையில் விற்பதிலும் எக்கச்சக்கமான லாபம் கிடைக்க வழியுண்டு. வைரங்களின் விலை உயர்ந்த அளவுக்கு நீதிஸ்தலங்கள் இத்தகைய குற்றங்களை இழைப்போருக்கு அளிக்கும் தண்டனையின் அளவு உயரவில்லை. 1929ல் எழுபது பவுண்டுக்கு விற்ற ஒரு நேர்த்தியான வைரக் கல்லின் இன்றைய விலை 230 பவுண்டு. ஆனால் 40,000 பவுண்டு பெறுமானமுள்ள வைரங்களைத் திருடிக் கள்ளக் கடத்தல் செய்ய முற்பட்ட ஒருவனுக்குக் கிடைக்கும் தண்டனை ஒன்பது மாதம் கடுங்காவல் மட்டுமே!" என்று கூறினார் ஜான் ப்ளெய்ஸ். பின்னர் பாட்டர்ஸனின் வாழ்க்கை இதற்கு ஓர் உதாரணம் என்று சொல்லி விட்டு மேலும் தொடர்ந்தார் :

ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரையில் ஆரஞ்சு நதி கடலில் சங்கமமாகும் இடத்திலிருந்து வடக்கே நூற்றி எண்பது மைல் தூரத்துக்கு மிகப் பெரிய வைர வயல் இருக்கிறது. இங்கே வைரச் சுரங்கங்கள் வெட்ட வேண்டாம். கடற்கரையின் மணல்பரப்பில் அள்ளித் தெளித்தாற்போல் இங்குமங்குமாய் வைரக் கற்கள் சிதறிக் கிடக்கின்றன. கடலின் அடிவாரத்தில் உள்ள ஒரு வைரப் படுகையிலிருந்து பல ஆயிரம் வருஷங்களில் அலைக் கரங்கள் அள்ளிக் கொண்டு வந்து சேர்த்த வைரக் கற்கள் இவை. என்றைக்காவது ஒரு நாள் கடலின் அடிமட்டத்திலுள்ள அந்த வைரச் சுரங்கத்திலிருந்து வைரங்களை எடுக்கும் விதத்தை விஞ்ஞானி ஒருவன் கண்டுபிடித்து விட்டால் பிறகு உலகில் வைரங்களுக்கு மரகதங்களின் மதிப்புக்கூட இராது!

இந்தக் கடற்கரையில் வைரச் செழிப்பு மிக்க குறிப்பிட்ட ஒரு பகுதியை டி. பீர்ஸ் ஸ்தாபனம், பாட்டர்ஸனின் மேற்பார்வையில் விட்டிருந்தது. 1952 ஜனவரி முதல் ஆகஸ்டு வரை இங்கே கூடாரம் அமைத்துக் கொண்டு நீக்ரோ பணியாட்களை வேலை வாங்கினான் பாட்டர்ஸன். அவர்கள் சேகரித்துக் கொண்டு வரும் வைரக் கற்களை எண்ணி எடை பார்த்துச் சேகரித்து வைப்பது அவன் வேலை. வாரத்துக்கு ஒருதரம் பாட்டர்ஸனுடைய மேலதிகாரி வருவார். அந்த வாரம் சேகரிக்கப்பட்ட வைரங்களைக் கணக்குப் பார்த்து எடுத்துக் கொண்டு போய் விடுவார்.

பாட்டர்ஸனின் ஆசையை அடக்க முடியவில்லை. உண்மையில் கள்ளக் கடத்தலையே தொழிலாகக் கொண்டு பல அங்கத்தினர்களுடன் பெரிய அளவில் இயங்கும் ஒரு ஸ்தாபனத்தைச் சுற்றி வளைப்பதைவிட, பாட்டர்ஸனைப் போல் கௌரவமாக வாழ்ந்து திடீரெனத் தனிப்பட்ட முறையில் இத்தகைய செயல்களில் ஈடுபடுவோரைக் கண்டு பிடிப்பது சிரமம். இதற்கு முன்னால் போலீஸாரிடம் எந்தக் காரணத்துக்கும் அவர்கள் மாட்டிக் கொண்டதில்லை. யாருக்கும் அவர்கள்மீது சந்தேகம் எழவும் செய்யாது.

ஸ்விட்ஜர்லாந்து பாங்கில் ஏராளமான பணம், ஒரு கெடிலாக் கார், பக்கத்தில் ஓர் அழகிய பெண்...... தன்னையும் சிற்றாள்கள் ஒரு சிலரையும் தவிர ஆள் நடமாட்டமே இல்லாத அந்தப் பாலைவனத்தில் கூடாரம் அமைத்து உட்கார்ந்திருந்தபோது பாட்டர்ஸனை

னுக்கு இவ்வாறெல்லாம் வசதியான வாழ்க்கையைப் பற்றிய சிந்தனைகள் தோன்றியிருக்க வேண்டும். அவன் துணிந்து விட்டான்.

நிர்வாணமான ஒருவன்கூடத் தன் மேனியில் வாழ் நாள் முழுதும் தான் பணக்காரனாக வாழ வேண்டிய அளவுக்கு வைரங்களைத் திருடிப் போகலாம்! கண்டுபிடிக்கப்பட்டாலும் தண்டனை அதிகமில்லை; சீக்கிரமே வெளியே வந்து சுதந்திரமாய் மீண்டும் உலவலாம். போலீஸாருடைய 'ரிகார்டி'ல் அவன் பெயர் பதிவு செய்யப்படும் என்ற ஒரு சங்கடம்தான். நாடு விட்டு நாடு போய்க் குடியேறலாம் என்றாலும் சர்வதேச போலீஸ் படையின் ஏடுகளில் அந்நபரின் பெயர் நிச்சயம் இருக்கும். இதிலிருந்து மீளவும் வழி இல்லாமல் போகவில்லை. டான்ஜிர் போன்ற நகரங்களில் ஐம்பது பவுண்டு கொடுத்தால் ஒரு பிரிட்டிஷ் பாஸ்போர்ட்டும் இருபது பவுண்டுக்கு ஓர் அமெரிக்கப் பாஸ்போர்ட்டும் கிடைக்கும்.

தாய்நாடு திரும்புமுன்னர் பிரிட்டிஷ் அமெரிக்க மாலுமிகள் தங்கள் பாஸ்போர்ட்டுகளை விற்று விட்டு அந்தப் பணத்தைக் கொண்டு இரண்டு நாள் 'கொட்டம்' அடித்து விட்டுக் கப்பலேறிப் போய் விடுவார்கள். அத்தகைய பாஸ்போர்ட்டுகளில் ஒன்றை வாங்கிக் கொள்ள வேண்டியது. பாஸ்போர்ட்டில் உள்ள புகைப்படத்துக்கு ஏற்ப முகத் தோற்றத்தைக் கொஞ்சம் மாற்றி அமைக்கவும் பிளாஸ்டிக் சிகிச்சையில் நிபுணர்களான டாக்டர்கள் உள்ளார்கள். புதிய தோற்றமும் புதிய பெயரும் பூண்டுவிட்டால் பிறகு போலீஸாரின் ஏடுகளில் தங்கள் பூர்வீகம் பற்றிய குறிப்புகள் இருந்தால்தான் கவலை என்ன?

இதையெல்லாம் பாட்டர்ஸன் யோசித்துப் பார்த்து விட்டுத்தான் ஒரு முடிவுக்கு வந்தான்.

சரி, வைரங்களை எப்படிக் கொண்டுபோவது?

வைரச் சுரங்கங்களிலும் அதை யொட்டிய அலுவலகங்களிலும் வேலை பார்ப்போர் ஒவ்வொரு நாளும் எஸ்டேட்டுக்குள்ளேயே உள்ள தங்கள் வீடுகளுக்குத் திரும்பும் போது அவர்களை எக்ஸ்ரே எடுத்தால் அவர்கள் வைரங்களைத் திருடிப் போகிறார்களா இல்லையா என்பது எக்ஸ்ரேயில் பளிச்சென்று தெரிந்து விடும். ஆனால் அப்படித் தினந்தோறும் எக்ஸ்ரே எடுத்தால் மனிதர்கள், பூச்சி மருந்து தெளிக்கப்பட்டதும் உயிரை விடும் எறும்புகளைப் போல் எக்ஸ்ரேயால் பாதிக்கப்பட்டுச் செத்துப் போய் விடுவார்கள். அதிகாரிகள் ஒவ்வொரு நாளும் எக்ஸ்ரே எடுப்பதாகப் பிரமை உண்டாக்கி ஏமாற்றுவார்களேயன்றி நிஜமாகவே எக்ஸ்ரே எடுப்பதில்லை! ஆங்காங்கே எக்ஸ்ரே காமிராக்கள் மறைந்து நிற்கும்; திடுமென யாரும் எதிர்பாராத சில தருணத்தில் அதை இயக்கித் தொழிலாளர்களைப் பரிசோதிப்பார்கள். ஆனால் வைரச் சுரங்க எஸ்டேட்டின் எல்லைப்புறத்தைத் தாண்டிச் செல்லும் அனைவரும்—நாய், பூனை, பெட்டி, படுக்கை, உள்பட சகலமும் — எக்ஸ்ரேக்கு உட்பட்டே ஆகவேண்டும். இந்த எக்ஸ்ரே காமிராக்கள் படிப்பறிவு அதிகமில்லாத நீக்ரோத் தொழிலாளர்களைப் பயமுறுத்தலாம். ஆனால் பாட்டர்ஸன் போன்ற உயர் அதிகாரி இதற்குக் கலங்குவானா?

சுரங்கங்களை நிர்வகிக்கும் ஒரு கம்பெனி வைரங்களைப் பூமியிலிருந்து எடுக்க எத்தனை பணம் செலவழிக்கிறதோ அந்த அளவுக்குக் கள்ளக் கடத்தலில் ஈடுபடும் ஒரு கூட்டமும் செலவழிக்க நேரும் என்பதை பாட்டர்ஸன் உணர்ந்திருந்தான். ஆகவே தானும் தாராளமாய்ப் பணம் செலவழிக்கத்தான் வேண்டும்.

ஒவ்வொரு நாளும் தன்னிடம் எண்ணி எடை போடுவதற்காக வந்து சேரும் வைரங்களின் ஒரு சிறு பகுதியை யாரும் பார்க்காத போது தனியாக எடுத்து வைத்து வந்தான் பாட்டர்ஸன். மீதமுள்ளதை மட்டுமே எடை பார்த்து எண்ணி மேலதிகாரியிடம் கணக்கு ஒப்புவித்து வந்தான். அவனுடைய திருட்டுச் சொத்து நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. லீவிலே இங்கிலாந்து சென்று வருவதாய்க் கூறி விட்டுக் கிளம்ப வேண்டியதுதான். ஆனால் வைரங்களைப் பின்னோடு எப்படி எடுத்துப் போவது? லீவிலே போகும் அவனை எக்ஸ்ரே எடுத்துப் பாராமல் எஸ்டேட்டின் எல்லையைத் தாண்ட விடமாட்டார்களே?

எக்ஸ்ரே காமிராவை இயக்குபவனுக்கு லஞ்சம் கொடுக்கலாமா என்று யோசித்தான் பாட்டர்ஸன். தான் கொண்டு செல்லப் போகும் செல்வத்தின் பெரும்பகுதியை அவனுடன் பகிர்ந்துகொள்ள அவனுக்கு மனமில்லை.

சென்ற வருஷம்தான் அமெரிக்காவில் எப். பி. ஐ. ஸ்தாபனம் வெய்னர் வீட்மான் என்பவனைக் கைது செய்தது அவனுக்கு நினைவு வந்தது. விமான நிலையத்திலேயே அவனைக் கைப்பற்றி அழைத்துப் போய்ப் பரிசோதித்ததில் அவனுடைய பூட்ஸின் அடிப்பாகத்தில் குதிகாலில் ஒரு ரகசிய அறை இருப்பதும் அதனுள் ஏராளமான வைரங்களை அவன் பதுக்கி வைத்திருப்பதும் தெரிய வந்தன. அத்தகைய முறைகளெல்லாம் கள்ளக் கடத்தல் துறையில் அநுபவமில்லாத 'கத்துக்குட்டி'களின் வேலையாகத் தோன்றியது பாட்டர்ஸனுக்கு. 'எனக்கும் இது முதல் முயற்சிதான், என்றாலும் அப்படி முட்டாள்தனமாய்க் காரியம் செய்ய மாட்டேன். சாமர்த்தியமாக நடந்து கொள்வேன்' என்று எண்ணினான்.

தன்னிடமுள்ள மோட்டார் வானில் வேட்டையாடப் போவதாகச் சொல்லி விட்டுக் கிளம்பி ஆயிரக்கணக்கான சதுர மைல் பரப்பளவுள்ள எஸ்டேட்டின் எல்லையை நோக்கிச் செல்வது. தலை வாயிலை அடையாமல் வேறு திசையில் போய்க் கட்டுக் காவல் அதிகமில்லாத எல்லைப் பகுதியை அடைவது. அங்கே அடையாளமாக, எல்லைப்புறத்தைக் குறிக்கும் சிக்னல் விளக்கு ஒன்றுக்குப் பக்கத்தில் வைரங்களைப் புதைத்து வைப்பது. பின்னும் வழக்கமான சம்பிரதாயங்களுக்கு உட்பட்டு லீவு எடுத்துக் கொண்டு புறப்படுவது. எல்லையைத் தாண்டிப் போன பிறகு மறு பக்கத்திலிருந்து குறிப்பிட்ட இடத்துக்கு வந்து வைரங்களைத் தோண்டி எடுத்துக் கொண்டு செல்வது......

இந்தத் திட்டமும் சரி என்று படவில்லை பாட்டர்ஸனுக்கு. எல்லைப்புறம் வரை காரில் சென்று திரும்பவே பல நாட்களாகும். அதனால் சந்தேகம் ஏற்பட்டு அதிகாரிகள் ஆராய்ந்தாலோ கார்ச் சக்கரங்கள் மணலில் பதிந்த



''இந்தாங்க எழுந்திருங்க! கீழே திருடன் வந்திருக்கிறான். நீங்க கீழே போய்ப் பாராக்காரனை எழுப்பி அவனை விட்டு நாயை எழுப்பச் சொல்லுங்க!''

சுவடுகள் பல வருஷங்கள் வரை அவனுக்கு எதிராகச் சாட்சியம் கூறிக் கொண்டிருக்கும்.

முடிவாக ஒரு தீர்மானத்துக்கு வந்தான் பாட்டர்ஸன். தான் வேலை செய்யும் இடத்துக்கு அருகிலேயே கடற்கரையிலேயே குறிப்பாக ஓரிடத்தில் வைரங்களைப் புதைத்து வைத்துவிட வேண்டியது. லீவு எடுத்துக் கொண்டு ஊருக்குக் கிளம்புவது. அங்கிருந்தபடி தனக்கு வேறு வேலை கிடைத்துவிட்டதாயும் இந்த வேலையை ராஜிநாமா செய்வதாயும் கடிதம் எழுதிவிட வேண்டியது. பிறகு ஒரு சிறிய விமானத்தையோ அல்லது ஒரு குட்டிக் கப்பலையோ வாடகைக்கு எடுத்துக் கொண்டு ஆள் நடமாட்டம் இல்லாத இதே கடற்கரைப் பகுதியில் வந்திறங்குவது. வைரங்களைப் புதைத்து வைத்த இடத்திலிருந்து எடுத்துக் கொண்டு வந்த மார்க்கமாகவே திரும்பி விடுவது. விமான பைலட்டுக்குச் சில 'நூறு பவுண்டு நோட்டு'க்களைக் கொடுக்க வேண்டியிருக்கும்: அதனால் பரவாயில்லை; இப்போதுதான் அவன் பணக்காரனாயிற்றே!

ஆனால் நீதி வழுவாத விதி எல்லாருடைய வாழ்க்கையிலும் குறுக்கிடுவதுபோல் பாட்டர்ஸனின் வாழ்க்கையையும் நிர்ணயித்தது.

1952 டிஸம்பர் 21ந் தேதி மாலை இரண்டரை மணிக்கு அந்த வைரக் கம்பெனியின் பாதுகாப்பு காரியாலயத்துக்குப் பாட்டர்ஸனும் பிளேக் என்ற விமானப் பைலட்டும் அழைத்து வரப்பட்டனர். அவர்களை அழைத்து வந்தவர், அவர்கள் விமானம் இறங்கிய இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் வேலை பார்த்து வந்த ஒரு கம்பெனி ஓவர்ஸியர். தம் கூடாரத்துக்கு இருவரும் கால்நடையாக வந்ததாக அந்த ஓவர்ஸியர் கூறினார்.

''மூடுபனி இருந்திருந்தாலும் ரேடியோக் கருவி இல்லாததாலும் விமானத்தை அங்கே இறக்க வேண்டியதாகி விட்டது'' என்றான் பைலட். பாதுகாப்பு அதிகாரிக்குச் சந்தேகம் தட்டியது. ''கடற்கரையைத் தாண்டி இரண்டு மூன்று மைல் உள்நாட்டில் புகுந்து பறந்தால் மூடுபனியே இராதே. அந்தப் பகுதியில் நீண்டநாள் வசித்துள்ள பாட்டர்ஸனுக்கு இது தெரிந்திருக்க வேண்டுமே?'' என்றார். இத்தருணத்தில் அந்த ஓவர்ஸியர் கடற்கரையில் அன்றைக்கு மூடுபனி அதிகமில்லை என்றும் இயந்திரக் கோளாறினால் அங்கே இறங்க நேர்ந்ததென்று விமானப் பைலட் தம்மிடம் கூறியதாகவும் தெரிவித்தார்.

இதன் பிறகு சும்மா இருப்பார்களா? இருவரையும் போலீஸாரிடம் ஒப்படைத்துவிட்டு ஆராய்ச்சிகள் நடத்தினார்கள். விமானம் கீழே இறங்கிய சுவடுகளும், இருவர் நடந்து சென்ற சுவடுகளும் தெரிந்தன. அந்த இருவரும் திரும்பி வந்து விமானத்தில் ஏறியிருக்கிறார்கள். விமானம் தென்மேற்குத் திசை நோக்கித் திரும்பியிருக்கிறது. கிளம்பித் தரையில் வேகமாய் ஓடியிருக்கிறது. இத்தனை சுவடுகளும் மணல் பரப்பில் தெளிவாய்த் தெரிந்தன. பிறகு நடந்ததை ஊகிப்பதும் கடினமாயில்லை. மேலே ஏற முற்பட்ட சமயத்தில் விமானத்தின் இடது சக்கரம் ஒரு பாறையில் மோதிச் சேதப்பட்டிருக்கிறது. பிறகு இரண்டு சக்கரங்களுமே பாறைகளில் இடித்துப் பழுதடைந்து போக விமானமும் தரையோடு தரையாகப் பாறைகளுக்கிடையில், நின்று பார்க்கப் பரிதாபமாகக் காட்சி தந்து கொண்டிருந்தது. பைலட்டுடைய சாமர்த்தியத்தால்தான் இருவரும் சாகாமல் பிழைத்திருந்தார்கள். சக்கரங்கள் பாழாகிவிட்டிருந்த போதிலும் விமான எஞ்ஜினை ஆராய்ந்ததில் சிறிதுகூடப் பழுதுபட்டிருக்கவில்லை என்பது தெரியவந்தது. இயந்திரக் கோளாறினால் கீழே இறங்க நேர்ந்ததாய் அவர்கள் கூறியது பொய் என்பது புரிந்தது. இந்தச் சாட்சியங்களையெல்லாம் கட்டிக் காட்டியதும் பாட்டர்ஸன் உண்மையை ஒப்புக்கொண்டு விட்டான்.

வைரங்களை எடுத்துக் கொண்டுதான் அவர்கள் கிளம்பினார்கள். விமானம் பாறையில் மோதிக் கொண்டது. இரண்டாவது முறையாக வைரங்கள் அடங்கிய தகர டப்பாவை ஒளித்து வைத்து விட்டு வந்திருந்தான் பாட்டர்ஸன். காவலர்கள் உடன் வர அவன் கடற்கரைக்குச் சென்று ஒரு பாறையின் மறைவிலிருந்து பெட்டியை எடுத்துக் கொடுத்தான். அதில் சிறிதும் பெரிதுமாய் 1400 வைரங்கள் இருந்தன. எடை 2276 காரட்; மதிப்பு 40,000 பவுண்டு! பாட்டர்ஸனை ஒன்பது மாதமும் பிளேக்கை ஆறு மாதமும் உள்ளே தள்ளி விட்டார்கள்......

இது போன்ற பல சுவாரசியமான கதைகளை ஐயான் ப்ளெமிங்குக்குக் கூறிய ஜான் ப்ளெய்ஸ் கடைசியாகச் சொன்னார்:

''எனக்கு வேவு பார்க்கும் வேலை அலுத்துப் போய் விட்டது. ஏதாவது நிம்மதியான வேலையை மேற்கொண்டு இத்தகைய அருவருப்பான விஷயங்களை மறந்து விடவே விரும்புகிறேன். நீங்கள் (ஐயான் ப்ளெமிங்) ஒரு புத்தகத்தின் கடைசி வரியாக எழுதியிருப்பதுபோல் 'இவ்வாறெல்லாம் வாழ்வதைவிட இவ்வாறெல்லாம் படிப்பதே நன்றாக இருக்கிறது'.''

# உங்கள் கேசம் உதிருகிறதா?

இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



பொடுகு

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.





கேசம் உதிருதல்

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**

இப்பிணியை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்கு அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹேயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

**ப்யூர் சில்விக்ரீன்**



கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

---

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/5/08

# படம் பிடிக்கும் போதினிலே



இந்தியப் படங்களுக்கே பாடல்கள் இன்றியமையாத அம்சம். தமிழ்ப் படங்களுக்கோ உயிர்நாடி. அந்தக் காலத்தில் அறுபது, அறுபத்தைந்து வாரங்கள் ஓடிய எம். கே. தியாகராஜ பாகவதர், பி. யூ. சின்னப்பா நடித்த படங்கள் கூட அவர்கள் பாடிய பாடல்களுக்காகவே ஓடின.

தமிழ்ப் படங்களில் இசை அமைக்கும் கலையில் புகழ் பெற்று விளங்கும் "திரை இசைத் திலகம்" கே. வி. மகாதேவன் அவர்களைச் சந்தித்தேன். "கங்கைக்கரைத் தோட்டம்" என்னும் பாட்டினாலேயே பிரசித்தி பெற்று விட்ட "வானம்பாடி" படத்துக்கு இசை அமைத்தவர் இவர்தான்.

"இருவர் உள்ளம்", வைரூச", "பரிசு", "அன்னை இல்லம்", "கொடுத்து வைத்தவள்", "குங்குமம்" ஆகிய படங்களுக்கு இசை அமைத்திருக்கிறார். ஒரு விசேஷம் என்னவென்றால், மகாதேவன் இசை அமைக்கும் படங்களில் ஏதாவது ஓரிரண்டு பாடல்கள் ரசிகர்களைப் பாடவைத்து விடும்.

"சங்கீதம் எங்கள் குடும்பத்தின் பரம்பரை ஆஸ்தி. அதைத் தவிர அந்த நாளில் ஆஸ்தி என்று சொல்லிக்கொள்ள வேறொன்றும் இல்லை. என் தகப்பனார் வெங்கடாசலய்யர் சங்கீத வித்வான்; பள்ளி ஆசிரியர். அவரிடம் பயின்ற இசையோடு நான் நின்றுவிடவில்லை: பூதப்பாண்டி அருணாசலக் கவிராயரிடம் சங்கீதம் கற்றுக்கொண்டேன். பால கந்தர்வகான நாடக சபாவில் சேர்ந்து ஸ்திரீ பார்ட்டில் நடித்தேன்...." என்று திரு மகாதேவன் கொஞ்சம் கூடப் பிகுப் பண்ணிக்கொள்ளாமல் நான் அறிய விரும்பின விஷயங்களை 'டக்'கென்று சொல்லி விட்டார்.

"சினிமாவில் இசையமைக்க எப்படி ஆரம்பித்தீர்கள்?" என்று கேட்டேன்.

"கொலம்பியா ரிகார்டு கம்பெனியில் என் இசை ஞானத்துக்கு ஏற்ற வேலை கிடைத்தது. பிறகு அநுபவம் மிக்க இசை அமைப்பாளரான எஸ். வி. வெங்கட்ராமனுக்கு உதவியாளனாகச் சேர்ந்தேன். 1937ம் வருஷமென்று நினைக்கிறேன். காலஞ்சென்ற ச. து. சு. யோகியாரின் தயாரிப்பாகிய "ஆனந்தன் அல்லது அக்கினி புராண மகிமை" என்னும் படத்தில் முதல் முதலில் மியூஸிக் டைரக்டராகப் பணியாற்றினேன். அதன் பிறகு சேலம் மாடர்ன் தியேட்டர்ஸில் சேர்ந்தேன். சந்திரபாபுவின் முதல் படமான "தன அமராவதி"க்கு நான்தான் இசையமைத்தேன். 1949ம் வருஷம் ஜுபிடர் பிக்சர்ஸ் வாஹினியில் மியூஸிக் டைரக்டரானேன்."

திரு மகாதேவன் இப்போது வசதியாக வாழ்ந்தபோதிலும் சென்னைக்கு வந்த புதிதில் பல சிரமங்களுக்கு உள்ளானார். இன்று சாரீரமுள்ளோருக்காக உழைக்கும் அவர் அன்று தேவைப்பட்ட தருணங்களில் சரீர உழைப்பையும் தயங்காமல் மேற்கொண்டார்.

"உங்கள் துறையைப் பற்றி நீங்கள் குறைப்படுவதுண்டா?" என்று கேட்டேன்.

"ஒரே சமயத்தில் பல படங்களுக்கு இசை அமைத்து வரும்போது ஒரே மாதிரியான சோகக் கட்டங்களுக்கு ஏற்ற இசை அமைத்துத் தரும்படி நேரும். அப்போது எனக்கு மிகவும் அலுப்புத் தட்டி விடும்!

"ஒரு பாட்டுக்கு மெட்டுப் போட்டு அதை எல்லாரும் ஓ. கே. பண்ணி, ரிக்கார்டு செய்வதற்குள் எவ்வளவோ சிரமப்பட்டுப் போகிறோம். இருபது, இருபத்து நாலு தடவை பாட்டைப் பதிவு செய்து அவற்றில் எந்தெந்த அடிகள் நன்றாக இருக்கின்றனவோ அவைகளை யெல்லாம் வெட்டி எடுத்துக் கொள்வோம். ஒரு பிரதியிலிருந்து பல்லவி, இன்னொரு பிரதியிலிருந்து அநுபல்லவி, மற்றொரு பிரதியிலிருந்து சரணம் என்று தேர்ந்தெடுத்துக் கடைசியில் பாடலைப் பூர்த்தி செய்வார்கள். அவ்வளவு சிரமப்படுவதற்குக் காரணம் பாடல் 'ஹிட்'டாக அமைய வேண்டும் என்னும் ஆசைதான்" என்றார் மகாதேவன். தொடர்ந்து, "எத்தனையோ பாட்டுக்கள் மிகவும் பிரசித்தியடைந்திருக்கின்றன. ஆனால் நல்ல கர்நாடக மெட்டுக்களில் அமைந்த பாடல்கள்தான் மன நிறைவைக் கொடுத்து மனத்தில் நீண்ட காலம் நிலைக்கவும் செய்கின்றன" என்றார்.

சுமார் நூறு படங்களுக்கு இசையமைத்து இருபத்திரண்டு வருஷ அநுபவத்தோடு புகழ் பெற்று வாழும் திரு கே. வி. மகாதேவனின் கருத்து மிகவும் நியாயமானதாகும். ஆனால் அதைப் படாதிபதிகள் சிந்தித்துப் பார்க்க வேண்டுமே?

—விஜயம்

# அதிசயமான புதுமுறை தயாரிப்பு

## பெப்ஸோடெண்டின் அற்புத நுரை உங்கள் பற்களின் வெண்மையை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள்: புது முறைப்படி தயாராகும் பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இந்த அற்புத நுரை பற்களைப் பாழாக்கும் பழுப்பை அகற்றி அவைகளை இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கச் செய்கிறது...வாயைச் சுத்தம் செய்வதுடன் பெப்பர்மிண்டின் சுவையையும் அளிக்கிறது.

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்
இந்தியாவில் தயாரிப்பது
























1, 2. சென்னை முத்தியாலுப்பேட்டை ஸ்ரீ வேணுகோபாலஸ்வாமி கோயில் ராயகோபுர கைங்கர்யத்துக்காக ராஜாஜி அவர்களின் தலைமையில் திருவாழி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் ராமாயண உபன்யாசம் செய்தார். 3, 4, 6. வாலாஜாபேட்டை தீனபந்து ஆசிரமத்தின் ஆண்டு விழாவில் கல்வி கலை அரங்கத்தை ஸ்ரீ டி.கே. ஷண்முகம் திறந்து வைத்தார். 5. புதுதில்லி கர்நாடக சங்கீதசபை விழாவில் நடனமாடிய குமாரி வசந்திக்கு மந்திரி ஸ்ரீ சத்தியநாராயண சின்ஹா பரிசளிக்கிறார். 7. தியாகராயநகர் வெ—விஷ்ணு ஆலயத்தில் ராம பட்டாபிஷேகத்தன்று ஸ்ரீமதி ஞானசுந்தரம் பக்தவத்சலம் ஸ்ரீமதி சிவானந்த விஜயலட்சுமிக்குப் பொன்னாடை போர்த்தினர்.

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி






## பாமாலிவ் பெர்ஃபியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**



காப்டன் கஸாபியான்கா தன் மகனை ஒரு தடவை தன்னுடைய கப்பலில் ஏற்றிச் சென்றான். மகனை மேல்தளத்தில் நிறுத்தி வைத்து, 'இங்கேயே நான் வரும் வரையில் நான் கொடுத்த காரியத்தைச் செய்து கொண்டு நில்!' என்று கட்டளை விட்டு விட்டுக் கீழ்த்தளத்துக்குச் சென்றான் காப்டன் கஸாபியான்கா. பெரும் புயல் அடித்தும் கப்பலில் நெருப்புப் பிடித்தும் அவன் மகன் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. பெரும் புயலில் சிக்கியதால் கப்பல் இன்ஜின் அறையிலிருந்து தன் கடமையை விட்டுக் காப்டன் கஸாபியான்காவினால் வரமுடியவில்லை. தனக்கு அளித்த கடமையை நிறைவேற்றும் பணியிலே அந்தச் சிறுவன் தன் உயிரைத் தியாகம் செய்தான்.......

இப்படித் தீரம் மிக்க கதைகளை ஸ்ரீதரனின் மாமா அவனுக்குச் சொல்லியிருந்தார். அது மட்டுமல்ல; அவன் மாமா கப்பல் துறையில் பணியாற்றியதால் அவனுக்குக் கப்பல் அனுபவங்களையும் எடுத்துக் கூறியிருந்தார். இவையெல்லாம் சேர்ந்து ஸ்ரீதரனுக்கு இள வயதிலிருந்து தானும் கப்பல் துறையில் பணியாற்ற வேண்டும் என்ற ஆசைக்கு வித்திட்டன.

ஸ்ரீதரன் பெங்களூரில் யுனைடெட் மிஷன் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. பயின்று அதில் முதன்மையாகத் தேறினான். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்ததுபோலவே கப்பல்துறையில் பணி புரிய வேண்டும் என்ற ஆசையும் பல்கிப் பெருகி வளர்ந்தது. ஸ்ரீதரன் எஸ். எஸ். எல். ஸி. தேறியதும் கடற்படை இலாகா அதிகாரியிடம் போய்த் தான் அதில் சேர விரும்புவதாகத் தெரிவித்தான்.

''உனக்கு உரிய வயதாகவில்லை. உன்னை எப்படித் தேர்ந்தெடுப்பது?'' என்று கூறி அந்த அதிகாரி அவனை அனுப்பி விட்டார்.

கென்னடிக்கும் இப்படியோர் அனுபவம் ஏற்பட்டதாம். அவர் முதுகில் ஏதோ காயம்பட்டிருப்பதாகக் கூறிக் கல்லூரியை விட்டுக் கடற்படையில் சேர வந்த அவரை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார்களாம். பிறகு அவர் விடாப்பிடியாகத் தேகப்பயிற்சி செய்து உடலை வளர்த்துக் கடற்படையில் சேர்ந்து ஆற்றிய தீரச் செயல்கள் அனைவருக்கும் தெரியும். ஸ்ரீதரனுக்கு முதலில்சேர அனுமதி கிடைக்கா விட்டாலும் அவன் மனம் தளர்ந்து விடவில்லை.



■ கப்பல் துறைத்தொழில் கல்லூரியில் சேர்ந்து கொள்வதற்கு ஏற்கனவே இரண்டு வருஷங்கள் கல்லூரி அனுபவம் இருக்க வேண்டும் என்று ஒரு விதி உண்டாம். ஆகவே ஸ்ரீதரன் லயோலாக் கல்லூரியில் பி. யூ. ஸி. வகுப்பிலும் பி. எஸ்ஸி. முதல் வருஷமும் தேறினான். அப்பொழுது தான் அவனுக்கு எத்தனை ஆனந்தம்! தான் கப்பல் துறையில் சேர நேரம் வந்து விட்டது என்பதில் அளவற்ற திருப்தி. 'மேலைக் கடல் முழுதும் கப்பல் விடுவோம்!' என்ற மகிழ்ச்சி.

ஸ்ரீதரன் ஆவலுடன் தன் தந்தை நரசிம்மனிடம் வந்து, ''கப்பல் துறை இன்ஜினீயரிங் கல்லூரியில் சேருவதற்கான விண்ணப்பங்களைப் பூர்த்தி செய்து உடனே சேர ஒத்தாசை செய்ய வேணும்!'' என்று கேட்டுக்கொண்டான்.

அவன் தந்தை திரு நரசிம்மனுக்குத் தம் புதல்வன் நன்றாகப் படித்துப் பட்டங்கள் பெற வேண்டும் என்ற ஆசை உண்டு. ஆனால் அவனை நடுக் கடலில் அனுப்பி வைக்க ஆசை இருக்குமா? ஆகவே விண்ணப்பங்களைப் பூர்த்தி செய்வதைக் கடைசி நாள் வரையில் தள்ளிப் போட்டுக் கொண்டு வந்தார்.

ஸ்ரீதரன் கடைசி நாள் கண் கலங்க வந்து நின்று, ''அப்பா! என் ஆசை, குறிக்கோள் எல்லாம் கப்பல்துறை நுணுக்கக் கல்லூரியில் சேருவது ஒன்றுதான். என் ஆசையைத் தகர்த்தெறிந்து விடாதீர்கள்'' என்று மன்றாடினான்.

கடைசியில் ஸ்ரீதரனின் பிடிவாதத்துக்கு இசைவது தவிர வேறு வழியில்லை தந்தைக்கு. விண்ணப்பங்களைப் பூர்த்தி செய்து அனுப்பிய பிறகுதான் அவன் தந்தையை விட்டு நகர்ந்து சென்றான்.

இன்று இந்திய ஷிப்பிங் கார்ப்பொரேஷன் நடத்தும் வியாபாரக் கப்பலொன்றில் உதவி இன்ஜினீயராகப் பணியாற்றும் ஸ்ரீதரன் கல்கத்தா கப்பல் துறை நுணுக்கக் கல்லூரியில் மூன்றரை வருஷங்கள் கப்பல் துறை சம்பந்தப்பட்ட எல்லாப் பயிற்சிகளும் பெற்றான். அவன் விரும்பிய துறை ஆயிற்றே. விரிந்து பரந்த ஆழ்கடலைக் கட்டியாளும் வன்மைக்குக் கடுமையான பயிற்சி தேவை தானே? கப்பல் துறையில் அவன் கற்றது புத்தகப் படிப்பைப் போன்றதல்ல. அவனுக்கேற்பட்ட அனுபவமே அவனுக்கு ஆசான். இத்தகைய கடுமையான துறையில் ஸ்ரீதரன் சிறப்புற்று விளங்கி, 'எல்லா

# இளைய பாரதத்தினர்

வகையிலும் தலைசிறந்த கப்பல் துறை இன்ஜினீயர்' என்ற புகழ் பெற்று, ஜனாதிபதியின் தங்கப் பதக்கமும் அடைந்தான். பயிற்சி பெற்ற தொண்ணூற்று மூன்று இன்ஜினீயர்களில் இத்தகைய மதிப்பு வாய்ந்த கௌரவம் இவனுக்குக் கிடைத்தது தமிழ் நாட்டுக்குப் பெருமையாகும்.

'திரைகடலோடியும் திரவியம் தேடும்' வியாபாரக் கப்பலில் செயலாற்றும் இன்ஜினீயர் ஸ்ரீதரனுக்கு விளையாட்டுக் கலையில் அதிக ஈடுபாடு உண்டு. நல்ல பேச்சாளன். புகைப்படம் பிடிப்பது இவனது பொழுது போக்கு. தமிழ் நாட்டில் செங்கல்பட்டு மாவட்டம் தாமல் கிராமத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட இருபத்தொரு வயது நிரம்பிய இளைஞன் ஸ்ரீதரன் வருஷத்திலே ஆறு மாதங்கள் நீலத் திரைக் கடலிலே கப்பலில் பணி புரிந்து அகில உலகமும் சுற்றி வருவான். இதில் எத்தனையோ அனுபவங்கள் அவனுக்குக் கிட்டும்.

சுதந்திர பாரதத்தில் கப்பலோட்டும் பணியில் ஈடுபட்டுள்ள இளைய பாரதத்தினனான ஸ்ரீதரனுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது.

—குண்டுமணி

## தேங்காய் மூடிக் கச்சேரியில்….!



# மகிழ்ந்து விளையாடும் நேரம்— உட்வர்ட்ஸுக்கு நன்றி




மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது

*Alyars ATC-486-TAM*



# சிரிக்கவும் — சிந்திக்கவும்



''...........நான் சந்தோஷப்படுகிறேன்''
— வி. வி. கிரி.
''............நான் மகிழ்ச்சியடைகிறேன்''
— பல்வந்த்ராய் மேதா.
''..........நான் ஆனந்தமடைகிறேன்''
— விஷ்ணுராம் மேதி.
''..............உவகையடைகிறேன் நான்.''
— எஸ். வி. ராமசாமி
''.............நான் மகிழ்ச்சியுறுகிறேன்.''
— நீதிபதி குமரய்யா.
''.....நான் களிபேருவகையடைகிறேன்.''
— ஷிலு அஓ.
(நாகாலாந்து முதன் மந்திரி)
''......நான் பெருமகிழ்ச்சியடைகிறேன்''
— மோகன்லால் சுகடியா.
''.........நான் சந்தோஷப்படுகிறேன்''
— செல்லபாண்டியன்.

கவர்னர்கள், சட்டசபைத் தலைவர்கள், மந்திரிகள், உப மந்திரிகள், நீதிபதிகள் முதலியவர்களை இப்படி மகிழ்ச்சியடையச் செய்திருக்கக் கூடிய அது என்னவாகத்தானிருக்கும்?

விஷயம் என்னவென்றால், ''அகில இந்திய மண்பாண்டக் கருத்தரங்கு ஏப்ரல் 11, 12 தேதிகளில் சென்னையில் நடைபெறவிருப்பதை அறிந்து'' இத்தனைபேரும் மகிழ்ச்சியடைந்து செய்திகள் அனுப்பியிருக்கிறார்கள். அவையெல்லாம் ராஜாஜி ஹாலில் நடைபெற்ற மகாநாட்டில் படிக்கப்பட்டன. இந்தக் கனவான்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு பானையை அனுப்பி வைத்தால் அதில் சோறு வடித்துச் சாப்பிட்டுவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார்களென்று நினைக்கிறீர்கள்! 'மகிழ்ச்சி', சந்தோஷம்' என்ற வார்த்தைகள் எப்படி அர்த்தமற்றுப் போய்விட்டன!

அ.இ.ரே. எனப்படும் ரேடியோவில் நான் எப்போதாவது பேச நேரும்போது பேச்சின் கையெழுத்துப் பிரதியில் நிர்வாகத்தை மறைமுகமாக, ஆனால் நாசுக்காகக் கேலி செய்யும் ஒன்றிரண்டு வார்த்தைகள் புகுந்து கொள்வதுண்டு. அது விஷயத்தில் நான் நிரபராதி. ஒரொரு சமயம் பேனா தானாகவே அப்படிச் செய்து விடும். சம்பந்தப்பட்ட வானொலி அதிகாரியின் கண்களில் அந்த வார்த்தைகள் பட்டதும் அவர் உடல் வியர்க்கும். ஆனால் சிரித்துக் கொண்டே ''அது 'இருக்கத்தான் வேண்டும் என்று நினைக்கிறீர்களா?'' என்று மிகவும் மரியாதையுடன் கேட்டு வைப்பார். 'அவர்கள் கொடுக்கும் இருபத்து நாலு ரூபாய் தொண்ணூறு பைசாவுக்கு அத்தகைய நல்ல விஷயம் தேவையில்லை' என்று எடுத்து விடுவேன்.

அமெரிக்காவில் தனிப்பட்டோர் நடத்தும் ரேடியோ டெலிவிஷன் ஸ்தாபனங்களில் அரசாங்க நிர்வாகத்தைப் பரிகசிக்கும் பேச்சுக்களைப் போல, நாடகங்களை நடத்த அனுமதிக்கிறார்கள். பிரெட் அலென் என்பவர் அமெரிக்காவின் தலைசிறந்த ரேடியோ—டெலிவிஷன் கலைஞர். 'டௌன் ஹால் டுநைட்' என்ற வரிசையில் அவர் வருமான வரி இலாகாவைக் கேலி செய்து ஒரு சம்பாஷணை நாடகம் நடத்தியிருக்கிறார்.

பிரபல சினிமா ஹாஸ்ய நடிகரான பிரெட் பார்க்ஸ் என்பவர் வருமான வரி பெடரல் அப்பீல் கோர்ட் அதிகாரி முன் ஆஜராகியிருக்கிறார்.

அதிகாரி: மிஸ்டர் பிரெட் பார்க்ஸ்! வருமான வரியிலிருந்து 3500 டாலர் தள்ளுபடி செய்துவிட வேண்டுமென்று கேட்கிறீர், என்ன விஷயம்?

பார்க்ஸ்: பொய்ப் பற்களுக்காக. என்னிடம் அவற்றில் ஐந்து உருப்படிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றின் விலை 700 டாலர். ஆக மொத்தம் 3500 டாலர்.

அதிகாரி: உமக்கு ஒரே ஒரு பொய்ப் பல் உருப்படி போதாதா?

பார்க்ஸ்: சாதாரண மனிதனுக்கு அது போதும். ஆனால், சினிமா நட்சத்திரம், தான் நடிக்க வேண்டிய பாகத்துக்கேற்றதை உபயோகிக்க வேண்டும்.

அதிகாரி: அதெல்லாம் கொண்டுவந்திருக்கிறீர்களா?

பார்க்ஸ்: ஒன்று வாய்க்குள் இருக்கிறது. மற்ற நான்கை இதோ உங்கள் மேஜைமீது வைத்திருக்கிறேன்.



பிரெட் அலென்

அதிகாரி: வாய்க்குள் இருப்பது என்ன ரகம்?

பார்க்ஸ்: அது சாப்பிடும் போது உபயோகப்படுவது.

அதிகாரி: இப்போது சாப்பிடவில்லையே? எதற்காக வைத்துக் கொண்டிருக்கிறீர்?

பார்க்ஸ்: எனக்கு உங்களோடு பேச நடுக்கமாயிருக்கிறது. நடுவே, நடுவே, நகத்தைக் கடித்துக் கொள்ள வேண்டியிருக்கும்.

அதிகாரி: அப்புறம்?

பார்க்ஸ்: இது இரண்டாவது. சிரிக்க உபயோகப்படுவது. வாயிலிருப்பதை எடுத்துவிட்டு இதை வைத்துக் கொள்கிறேன். ஹா...ஹா...

ஹா! எப்படிச் சிரிப்பு வருகிறது, பார்த்தீர்களா?......

சம்பாஷணை இந்த முறையில் நடைபெற்றுக்கொண்டு போகிறது. நடிகர் மற்ற மூன்று பொய்ப் பல் வரிசைகளும் நடிக்கும்போது தமக்கு எப்படி எப்படி உபயோகப்படுகின்றன என்று அவற்றை வாய்க்குள் வைத்துக் கொண்டு பேசி நடித்துக் காட்டுகிறார். ஆனால் அப்பீல் அதிகாரி அசையவில்லை.

அதிகாரி: ஒரே ஒரு பல் வரிசைக்காக 700 டாலர் மட்டும் தள்ளுபடி செய்யப்படும். பாக்கி 2800 டாலரையும் கட்டிவிட வேண்டியதுதான்.

பார்க்ஸ்: என்னிடம் பணம் இல்லையே!

அதிகாரி: அப்படியானால் பணம் கொடுக்கும்வரை பாக்கி நாலு பல் வரிசைகளையும் நாங்கள் வைத்துக் கொண்டிருப்போம்.

பார்க்ஸ்: அவை நான்கும் இல்லாவிட்டால் நடிக்க முடியாதே.

அதிகாரி: அதெல்லாம் எனக்குத் தெரியாது. வரி பாக்கியைச் செலுத்தும்வரை நாங்கள் சிரிப்பதற்கு, கோபிப்பதற்கு, பல்லைக் கடிப்பதற்கு, அழகு காட்டுவதற்கு உபயோகிக்கும் மற்றப் பல் வரிசைகளைத் திருப்பிக் கொடுப்பதற்கில்லை.

பார்க்ஸ்: அப்படியானால், இந்தாருங்கள், இதையும் வைத்துக் கொள்ளுங்கள்.

அதிகாரி: சாப்பிட உபயோகிக்கும் பல் வரிசையையுமா கொடுத்து விடுகிறீர்கள்?

பார்க்ஸ்: நான் இனிமேல் நடித்துப் பணம் சம்பாதிக்க முடியாது. ஆகையால் சாப்பாட்டுக்கு வழியில்லை. இனி அது எனக்கு எதற்கு?

பிரெட் அலென், அந்தக் கடைசி ஒரு வாக்கியத்தில் வருமான வரி இலாகாவைக் 'கொன்று'விட்டார். அவரது கலையுலக வாழ்க்கைக் குறிப்புகளும் அவரது ரேடியோ டெலிவிஷன் நாடகங்கள் சிலவும் அடங்கிய புத்தகம் 'டிரெட்மில் டு அப்ளிவியன்' (Treadmill to Oblivion) என்ற தலைப்புடன் வெளிவந்திருக்கிறது.

நமது ராஜ்ய புதிய கவர்னரான பழைய மைசூர் சமஸ்தான மகாராஜாவைப் பற்றி நினைக்கும்போது அவர் கேவலம் ஒரு மகாராஜாவாகவே என் மனத்தில் படுவதில்லை. ஒரு பிறவிக் கனவான் என்றே எண்ணத் தோன்றும். பொதுவாக அவரது மூதாதையர்கள் இந்திய மன்னர்களுக்குள் அதிகக் கெடுபிடி இல்லாதவர்களாகவும், ஜனநாயகக் கொள்கையில் அதிகப் பற்றுள்ளவர்களாகவும் இருந்தனர்.

சென்ற உலக மகாயுத்தம் உலகத்திலுள்ள மன்னர்களின் நிலைமையை எப்படித்தான் மாற்றி விட்டிருக்கிறது! ஜப்பானிய சக்கரவர்த்தி ஹிரோ ஹிட்டோ! அந்தப் பெயரையே எந்தப் பழைய கால ஜப்பானியனும் தன் வாயால் சொல்லிவிடத் துணிய மாட்டான். அந்தச் சக்கரவர்த்தி — சூரியனின் மகன் — பிரயாணம் செய்யும்போது வழியிலுள்ள வீடுகளின் ஜன்னல் கதவுகளையெல்லாம் சாத்திவிடுவார்கள், அல்லது திரைகளை இழுத்து விட்டுவிடுவார்கள். ஏனென்றால், சூரியன் மகனை நேருக்கு நேர் பார்த்தால் கண் குருடாகப் போய்விடும் என்று ஜனங்கள் நம்பிக் கொண்டிருந்தார்கள். அவரது படத்தின் மீது கூட மெல்லிய சல்லாத் துணியைப் போட்டு அதன் மூலமாகவே பார்ப்பார்கள். மந்திரிகளும், மற்ற உத்தியோகஸ்தர்களும் அவரிடம் பேசுவது ரகசியம் பேசுவதுபோல் இருக்கும். சந்நிதானத்தில் உரக்கப் பேசக் கூடாது. சக்கரவர்த்தியை யாரும் தொடுவதற்கில்லை. ஆகவே அவருக்கு உடைகள் தைக்க அளவெடுக்கும் தையற்காரர் சற்றுத் தூரத்திலிருந்து கொண்டேதான் அளவெடுக்க வேண்டும். தவறான அளவுள்ள உடைகளைத் தைத்து விட்டால் அந்தத் தையற்காரர் ஹாரகிரி, அதாவது தற்கொலை செய்துகொண்டு விடுவார். ஆனால் அந்தக் காலம் இப்போது ஸ்புட்னிக் ஏறிப்போய்விட்டது. ஜப்பானியச் சக்கரவர்த்தி இன்று அநேகமாக மிஸ்டர் ஹிரோ ஹிட்டோ ஆகிவிட்டார்.

வட போர்னியோ பகுதியில் புருனி (Brunei) என்ற ஒரு சிறிய தேசம் இருக்கிறது. அதன் சுல்தான் தர்பாருக்கு வரும்போது ஓர் உத்தியோகஸ்தர் கூறுவார்: 'சீமாட்டிகளே, கனவான்களே, நமது அன்புக்குரிய மன்னர், துவியான் மகா மூலி மௌலானா அல் சுல்தான் ஸர் உமர் அலி ஸைபுதீன் ஸாதுல் காயிரி வாதின் அவர்கள் வருகிறார்கள் என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். தயவு செய்து எல்லோரும் எழுந்திருந்து நில்லுங்கள்'' என்பார். இது 1964ம் வருடத்திய கட்டியம் கூறும் முறை. ஆனால் அந்தச் சுல்தான் மற்ற மனிதர்களைப் போலவே நடந்து கொள்வார்.

“ரயில் விளையாட்டு சிறுவர்களுக்கு மிகவும் பிடித்த விளையாட்டு.'' ரயில்வே வாரக் கொண்டாட்ட சம்பந்தமான விளம்பரம், இந்த வாக்கியத்துடன் ஆரம்பிக்கிறது. அத்துடன் சிறுவர்கள் ரயில் விளையாட்டு விளையாடும் சித்திரப் படமும் போட்டிருக்கிறது.

சிறுவர்கள் இப்போதெல்லாம் 'நவ' கணவன் மனைவி விளையாட்டு விளையாடுகிறார்கள். இடையில் 'நிக்கர்' தரித்திருக்கும் சீதாக்குட்டி, 'ஃபிராக்' தரித்திருக்கும் முத்துப் பையனைப் பார்த்து, 'நான் ஆபீசுக்குப் போய்விட்டு வரேன். நீ குழந்தையைப் பத்திரமாகப் பார்த்துக்கோ' என்று சொல்லிவிட்டுக் கிளம்புகிறாள். அதே போன்று தற்காலத்துக்கு ஏற்றபடி நவ ரயில்வே விளையாட்டு விளையாடுவதா யிருந்தால்?

டபார், டபார்: சிறுவர்களின் இரண்டு ரயில் கோஷ்டி ஒன்றுடன் ஒன்று மோதிக் கொள்ளலாம்.

இறங்கிப் பார்!: இது கூட்டம் நிரம்பி வழியும் வண்டியிலிருந்து இறங்கும் விளையாட்டு. மேஜையைக் குத்திட்டு அதன் மீதிருந்து மேலே வரலாம்.

கையில் காசு பையிலே டிக்கெட்: ஒரு பையன் ரயில்வே உத்தியோகஸ்தனாக வரும் பையனுக்கு முதுகுப்பக்கம் வழியாகக் காசு கொடுக்கிறான். ரயில்வே உத்தியோகஸ்தரா யிருப்பவன் டிக்கெட்டைக் காசு கொடுத்தவன் பைக்குள் போடுகிறான். **என். ஆர்.**




ஹார்வர்ட் சர்வகலாசாலையில் ஸ்வாமிஜி 'வேதாந்த தத்துவம்' என்ற பொருள் பற்றி ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். அந்த உரையைக் கேட்டுப் பேரறிஞர்களும் வியந்தனர். ஸ்வாமிஜியின் அறிவாற்றலைக் கண்ட ஹார்வர்ட் பல்கலைக் கழகத்தினர் அவருக்குக் கீழ் நாட்டுத் தத்துவப் பேராசிரியர் பதவியை அளிக்க முன்வந்தனர். பெருமதிப்பு வாய்ந்த ஒரு பதவி இது. என்றாலும் தியாக மூர்த்தியாகிய விவேகானந்தர் சந்நியாசியாகக் காலம் கழிக்கவே ஜன்ம விரதம் பூண்டவர். பேராசிரியர் பதவியை அவர் நன்றியுடன் மறுதலித்து விட்டார்.

கொலம்பியா சர்வ கலாசாலையினர் ஸ்வாமிஜிக்கு சமஸ்கிருதப் பேராசிரியர் பதவியை வழங்கிய போதும் இதே போல் அவர் மறுத்து விட்டார்.

பற்பல மத அநுஷ்டானங்களையும் கைவிடாமல், அத்வைதத்தை அவற்றுக்கு ஆதாரமாகவும், பின்னணியாகவும், லட்சியமாகவும் ஆக்கித் தருகிற 'பிரபஞ்ச சமயம்' பற்றி லண்டனில் பேசினார் ஸ்வாமிஜி.

அப்படிப்பட்ட பிரபஞ்ச சமயத்துக்கு அஸ்திவாரமாக வேதாந்த சங்கத்தை நியூயார்க்கில் நிறுவினார் ஸ்வாமிஜி. இதன் மூலம் ஸ்தூலமாக ஸ்தாபன ரீதியில் தமது பணியினைத் தொடங்கி விட்டார் அவர்.

நியூயார்க் வேதாந்த சங்கம் (The Vedanta Society of New York) தோன்றியது சமய சரித்திரத்தில் ஒரு முக்கியமான தினம். உலக மதம் என்பதாக ஒன்றுக்கு அங்குரார்ப்பணம் செய்த நாள் அதுவே அல்லவா? எல்லா மதஸ்தர்களையும், எல்லா விதமான சித்தாந்திகளையும் அழைத்தது வேதாந்த சங்கம். யாரும் எந்த மதக் கொள்கையையும் கைவிட வேண்டாம்; அவற்றை அநுசரிக்கும் போதே தங்கள் கையிலிருப்பதற்கு மேலான தத்துவத்தை உணரலாம் என்று கூறி, 'அவ்வாறு உணர வாருங்கள்' என்று அழைத்தது வேதாந்த சங்கம்.

நியூயார்க்கிலுள்ள சங்கத்தைப்போலப் பல இடங்களில் பல தோன்றிக்

66

கிழக்கையும் மேற்கையும் இணைக்க வேண்டுமென ஸ்வாமிஜி விரும்பினார். தமது குருபாயிக்கள் சிலர் மேல் நாடுகளுக்கு வந்து வேதாந்தப் பிரசாரம் செய்ய வேண்டும் என்றும், அதேபோல் அமெரிக்க, ஆங்கில சிஷ்யர்கள் இந்தியாவுக்குச் சென்று தொழிலும், விஞ்ஞானமும், பொருளாதாரமும், சமூக இயலும் போதிக்க வேண்டும் எனவும் ஆசைப்பட்டார் ஸ்வாமிஜி.

எதிர்காலத்தில் கிழக்குக்கும் மேற்குக்கும் உள்ள பிரிவுக் கோடு மறைந்து அவை ஒன்றாகும் என அவர் அடிக்கடி கூறி வந்தார்.

இந்தச் சமயத்தில் இன்னொரு ஹிமாலயப் பணி பற்றியும் ஸ்வாமிஜி நினைந்து வந்தார். அத்வைதம் — விசிஷ்டாத்வைதம் — த்வைதம், கர்மம் — ஞானம் — பக்தி, வேதங்கள் — புராணங்கள் — ஸ்மிருதிகள்

இவை யாவும் பற்பல அம்சங்களில் ஒன்றுக்கொன்று முரண்பட்டிருப்பது போல் தோன்றினாலும் உண்மையில் விரோதமற்றவை என்று நிரூபித்து, அவற்றைப் பல படிகளாகி சத்திய தரிசனத்துக்கு வழி வகுப்பனவாக அவலம்பிக்க வேண்டும்; இதன் மூலம் உலகத்தவர் யாவருமே தயக்கமின்றி ஏற்கக் கூடிய ஓர் அமைப்பாக ஹிந்து மதத்தின் சகல அம்சங்களையும் பாகுபடுத்தி புனர் நிர்மாணிக்க வேண்டும் எனத் துடித்தார் விவேகானந்தர்.

இந்தியாவிலிருந்து ஸ்வாமிஜிக்குக் கடிதங்கள் வரத் தொடங்கின — அவர் திரும்பி வரவேணும் என்று. அவர்களுக்கு ஸ்வாமிஜி விரைவில் திரும்பி வருவதாக எழுதினார். அவர் வருமுன்பே அவர்கள் ஒன்றாகச் சேர்ந்து செயலாற்ற வேண்டுமென்றும் எழுதினார். ஹிந்து தர்மத்தின் சாசுவத சத்தியங்களுக்கு ஒரு சின்னமாகத் திகழ்ந்த பரமஹம்ஸ ராமகிருஷ்ணரின் ஆணையை நிறைவேற்ற அவர்கள் ஒன்றுகூட வேண்டும் என்றார். அதே சமயத்தில் 'ராமகிருஷ்ண மதம்' என்பதாகக் குறுகலான புதியதொரு அமைப்பை ஏற்படுத்திவிடலாகாது என்றும் எச்சரித்தார். ''ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தெய்வமே ஆவார் என்பது போன்ற விஷயங்களை மேல்நாடுகள் ஏற்க மாட்டா. அப்படிச் செய்தால் நமது இயக்கம் ஒரு சிறிய ஜாதியாகி விடும். மக்கள் தாமாகவே அவரைக் கடவுளாக வழிபடுவதால் ஏதும் தீங்கில்லை. எனினும் நீங்கள் இதை ஊக்கவும் வேண்டாம், தாக்கவும் வேண்டாம்; பொதுமக்களுக்கு எப்போதும் மனிதரிடம்தான் ஈடுபாடு; அறிவில் உயர்ந்தவர்களுக்கோ தத்துவத்திலேயே ஈடுபாடு. நமக்கு இரண்டும் வேண்டும். என்றாலும் தத்துவங்கள் உலக முழுவதற்கும் பொதுவாயிருப்பது போல் மனிதரால் இருக்க முடிவதில்லை. எனவே அவர் போதித்த தத்துவங்களிலேயே ஒட்டிக் கொள்ளுங்கள். அவரைப் பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்களோ நினைத்து விட்டுப் போகட்டும்'' என்று எழுதினார்.

இங்கிலாந்திலிருந்தும் ஸ்வாமிஜிக்கு அழைப்புக்கள் வரத் தொடங்கின. அங்கு ஒருவாறு அவருடைய உபதேசங்கள் ஊறத் தொடங்கியிருந்தன என்றும் ஸ்வாமிஜியே நேரில் வந்து அவற்றை வலியுறுத்தி நிலைநாட்ட வேண்டுமெனவும் ஆங்கிலேய நண்பர்கள் விரும்பி அவரை அழைத்தனர்.

ஸ்வாமிஜி சிந்தித்தார். அமெரிக்காவில் சத்தான சிஷ்யர்களைத் தயாரித்தாகி விட்டது. சமூகத்தின் சகல பகுதிகளிலும் சத்திய தத்துவத்தைப் பற்றிய ஒரு விழிப்பை ஏற்படுத்தியாயிற்று. இனி அந்தச் சிஷ்யர்களே பொறியை அணைய விடாது காக்க முடியும் என்று நம்பினார்.

1896ம் ஆண்டு ஏப்ரல் பதினைந்தாம் தேதி நியூயார்க்கிலிருந்து இங்கிலாந்துக்குக் கப்பல் மார்க்கமாகப் புறப்பட்டார்.

லண்டனில் ஸ்வாமிஜிக்கு ஓர் ஆனந்த அநுபவம் காத்திருந்தது. முன்பு ஸ்வாமிஜி பணித்தபடி அவருடைய அருமை குருபாயி சாரதாநந்தர் அங்கு வந்து ஸ்வாமிஜியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

பார்த்துப் பார்த்துப் பதியன் போட்ட ரோஜாத் தோட்டத்தை நீண்ட நாட்கள் பாராமலிருந்து பின்னர் அது புஷ்பித்துக் குலுங்கும்போது கண்டால் எவ்வளவு உள்ள நிறைவு ஏற்படும்? தாம் பயிர் பண்ணிய குருபாயிகளை ஸ்வாமிஜி பார்த்து இப்போது எவ்வளவோ ஆண்டுகள் ஆகிவிட்டன. அவர்களில் ஞானசாரத்தில் செழிப்பாக வளர்ந்த ரோஜாவாக இன்று சாரதாநந்தரைக் கண்டதும் ஸ்வாமிஜிக்கு மனம் மகிழ்ந்தது. ஞானப் பூங்காவில் மற்ற செடிகளும் புஷ்பித்துவிட்டன என்றும் ஒரு செடிகூட வீண்போகவில்லை என்றும் சாரதாநந்தர் தெரிவித்தார். குருபாயிகள் இப்போது ஆலம்பஜார் என்ற இடத்தில் மடம் அமைத்துக் கொண்டு தூயப் பெருவாழ்வு வாழ்வதாக அவர் தெரிவித்தார்.

1896ம் ஆண்டு மே மாதத்தில் ஸ்வாமிஜி லண்டனில் உபதேச வகுப்புக்கள் தொடங்கினார். பொதுமேடைப் பிரசங்கங்கள் நிகழ்த்தினார். தனி மனிதர்கள் இல்லங்களிலும் சங்கங்களிலும் சொற்பொழிவுகள் ஆற்றினார்.

இவ்வளவு பேசியும் அவரோ தாமாக எதுவுமே பேசவில்லை என்றார். ''நானாகச் சொல்வதற்கு ஒரு சிறு வார்த்தை கூடக் கிடையாது. நானாக விரித்துரைப்பதற்குக் கடுகளவு சிந்தனைகூட என்னிடம் கிடையாது'' என்றார். அவர் எதுவாக இருந்தாரோ, இருக்கிறாரோ, இருக்கப் போகிறாரோ அவ்வளவும் ஸ்ரீராமகிருஷ்ணரிடமிருந்தே உண்டானவை என்று உணர்ச்சியுடன் வெளியிட்டார். ''அப்படிப்பட்ட என் குருநாதனின் தரிசனத்தை ஒரு க்ஷண காலமேனும் இவ்வுலகுக்கு நான் காட்ட முடியுமானால் நான் வாழ்ந்ததெல்லாம் வீணாகாது'' என்று அந்தரங்க சுத்தமாகக் கூறினார்.

இந்தச் சம்பவத்தைக் கூறும் விவேகானந்த வரலாற்றாசிரியர்கள், ''உண்மையான சிஷ்யனொருவனே உண்மையான ஆசாரியனாக முடியும்'' என்கிறார்கள்.

ஆக்ஸ்பர்ட் சர்வகலாசாலையில் பேராசிரியராக இருந்த மாக்ஸ் முல்லர் இந்தியராகப் பிறக்காமல் ஆங்கிலேயராகப் பிறந்தது இயற்கையில் ஒரு தவறுதலினால் என்றே சொல்லலாம். நம்முடைய புராதன வேதம் அச்சு வாகனமேறியதற்கு அவரே காரணம். கேசவ சந்திரஸேனரின் ஆத்மிகத் துடிப்பையும், சொற்பெருக்கையும் கண்டு அவரிடம் தொடர்பு கொண்டிருந்த மாக்ஸ் முல்லர் அவர் மூலமாகத் தட்சிணேசுவரத்துத் தபோநிதியைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். அவரிடம் பக்தி பூண்டு ஒழுகினார்.

ராமகிருஷ்ணர் என்பதை ஆத்மிகத்துக்கு மறுபெயராக மதித்து, அவருடன் தொடர்புள்ளவற்றையெல்லாம் புனிதமாகப் போற்றி வந்த மாக்ஸ்முல்லர் பரமஹம்ஸரின் பரம சிஷ்யரான ஸ்வாமிஜியைக் காண விரும்பினார். மே மாதம் 28ந் தேதி மாக்ஸ் முல்லரைக் காணச் சென்றார் விவேகானந்தர்.

ரமணீயமான நந்தவனத்திடையே கச்சிதமான ஒரு சின்னஞ் சிறு வீடு. வெள்ளி மயமாக நரை ஓடிய முடியும், சாந்தி பூத்த உருவும், எழுபது வேனில்களைக் கண்டும் வாடாமல் குழந்தையின் மென்மையுடன் கூடிய பாவனையும், உள்ளே எங்கோ இருக்கிற ஆத்மிகச் சுரங்கத்தைத் தெரிவிக்கும் வெளிக் கோடுகள் போன்ற ரேகைகள் படர்ந்த முகமாக விளங்கிய மாக்ஸ்முல்லரை ஸ்வாமிஜி கண்டார். மாக்ஸ்முல்லரையும், கண்ணியம் வாய்ந்த அவரது மனைவியையும் கண்டவுடன் தாம் இந்தியாவுக்கே வந்து விட்டது போலவும் அருந்ததியும் வசிஷ்டரும் போன்ற திவ்விய தம்பதிகளும், பிரம்மரிஷிகளும், ராஜ ரிஷிகளும், வானப் பிரஸ்தர்களும் வாழ்ந்த காலத்துக்குச் சென்று விட்டது போலவும் உணர்ந்தார் ஸ்வாமிஜி.

''பேராசிரியர் அவர்களே! இன்று ஸ்ரீராம கிருஷ்ணரை ஆயிரக்கணக்கானவர்கள் வழி படுகிறார்கள்'' என்றார் ஸ்வாமிஜி.

''அவரன்றி வழிபாடு பெறக் கூடியவர் வேறு யாருண்டு?'' என்று பதிலுக்கு வினவினார் நாட்டு எல்லைகளையெல்லாம் மீறி 'அப்பாலும் அடிசார்ந்த' அந்த அடியார்.

''நீங்கள் எப்போது இந்தியாவுக்கு வரப் போகிறீர்கள்?...'' என்று மாக்ஸ் முல்லரை ஸ்வாமிஜி கேட்டார். முனிவருக்குச் சமமான முல்லரின் முகத்தில் ஒரு பிரகாசம் தோன்றியது. அவர் கண்களில் ஒரு துளி உருண்டு விட்டது. தலையை மிருதுவாக அசைத்தார் அவர். ''இந்தியாவுக்கு வந்தால் நான் இந்த நாட்டுக்குத் திரும்ப மாட்டேன். என்னை அங்கேயேதான் நீங்கள் அடக்கம்செய்ய வேண்டியதாயிருக்கும்'' என்றார் மெதுவாக.

ராமகிருஷ்ணரின் சரிதத்தையும் உபதேசத்தையும் பரப்புவதில் தமக்குள்ள ஆர்வத்தைக் கூறி, தமக்கு விவரங்கள் தரக்கூடிய ஒருவரை உதவுமாறு ஸ்வாமிஜியிடம் கேட்டுக் கொண்டார் முல்லர். ஸ்வாமிஜி சாரதானந்தரை இப்பணியில் ஈடுபடுத்தினார்.

''ஏன் ஸ்வாமிஜி, தாங்களே இந்தச் சேவையில் இறங்கவில்லை?'' என்று கேட்டார் சாரதானந்தர்.

அப்போது ஸ்வாமிஜி தமது உணர்ச்சியெல்லாம் விம்மிப் புடைத்தெழக் கூறினார்: ''குருமஹராஜைக் குறித்து எனக்கு உள்ள உணர்வு மிக மிக ஆழ்ந்தது. இதனாலேயே என்னால் பொது உலகுக்கு அவரைப் பற்றி எழுத இயலாது. நான் எழுதினேனாயின் ராமகிருஷ்ணரே உலகில் இது வரை பிறந்த எல்லா ஞானிகளிலும் தலைசிறந்தவர் என்று நிரூபிக்க முயல்வேன். அது சரியல்ல'' என்றார்.

பிற்பாடு சாரதானந்தர் அளித்த குறிப்புக்களுடன் 'ராமகிருஷ்ணர்: அவரது வாழ்வும் உபதேசங்களும்' (Ramakrishna: His Life and Sayings) என்ற நூலை மாக்ஸ் முல்லர் எழுதினார். ஸ்வாமிஜியின் பணி ஆங்கில உலகில் ஆழப் பதிய இந்நூல் பெருதவி புரிந்தது.

'மோக்ஷ மூலர்' என்று போற்றப்படும் மாக்ஸ்முல்லரைப் பாரதம் என்றும் மறவாது.



''' 'எனக்கு சினிமாவைக் கண்டாலே கட்டோடு பிடிக்காது நான் போக மாட்டேன்' என்று நீங்கள் சொல்லுவது வழக்கமாச்சே! ஆனால் நீங்க நிறையச் சினிமாப் பார்த்திருக்கிறீர்களே!''

''அதுக்கு என்னய்யா பண்றது! 'சென்சார் போர்டிலே' நான் கொஞ்ச நாள் மெம்பரா இருந்தேனே!''

ஸ்வாமிஜியின் அஞ்சாத நெஞ்சுரத்தைக் காட்டும் ஒரு சம்பவம் அவரது இங்கிலாந்து வாசத்தின்போது நிகழ்ந்தது.

ஒரு நாள் குமாரி முல்லருடனும், ஆங்கிலேய நண்பர் இன்னொருவருடனும் ஸ்வாமிஜி வயல்களின் வழியாக நடந்து சென்று கொண்டிருந்தார்.

அப்போது திடீரென ஒரு வெறி கொண்ட காளை மாடு அவர்களை நோக்கிக் கன வேகமாகப் பாய்ந்து வந்தது.

ஆங்கிலேய நண்பர் அருகிலிருந்த குன்று ஒன்றின் பின்புறத்தில் போய் மறைந்து கொண்டார். குமாரி முல்லரும் ஓடினாள். ஆனால் பயப் பிராந்தியில் ஓரேயடியாகத் தளர்ந்து போய், சிறிது தூரம் சென்றவுடனேயே தரையில் சாய்ந்து விட்டாள்.

மாடு அவளை நெருங்கிக் கொண்டே வந்தது. பார்த்தார் ஸ்வாமிஜி. யோசித்தார். க்ஷண காலம்தான் யோசிக்க வேண்டியிருந்தது. தமது உயிரைப் பணயம் வைக்க அந்தத் தியாகமூர்த்திக்கு அதற்கு மேல் பொழுது தேவையாக இருக்கவில்லை. குமாரி முல்லருக்கு முன்னால் குதித்தோடினார் ஸ்வாமிஜி. அவளுக்கும் காளை மாட்டுக்கும் மத்தியில் நின்று விட்டார்; கண் மூடிக் கரம் குவித்தபடி நின்று விட்டார்.

'ஏன் அந்தப் பொல்லாத மாடு இன்னும் தம்மை முட்டவில்லை?' மரணத்தைப் பற்றிச்

சிறிதுகூடக் கவலைப்பட வில்லை ஸ்வாமிஜி. மாறாக அவருடைய அறிவு ஒரு கணக்கைப் போட்டுக் கொண்டிருந்தது. இத்தனை வேகத்தில் வருகிற இத்தனை எடையுள்ள இந்த மாடு தம்மைக் கொத்தி எறிந்தால் தமது உடல் எவ்வளவு அடிகள் தள்ளி விழும் என்று வேடிக்கையாகக் கணிக்கலானார் ஸ்வாமிஜி.

ஸ்வாமிஜி கண்களைத் திறந்தார்.

அந்தப் பொல்லாத மாடு — அல்ல, பொல்லாத்தனமே இல்லாத அந்த நல்ல மாடு— ஏனோ அவருக்கருகில் வந்ததும் தனது சண்டமாருத வேகத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு விட்டது. தலையைத் தூக்கி அவரைப் பச்சாத்தாபத்துடன் பார்த்தது. பிறகு தூக்கிய அந்தத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்த வழியே திரும்பிச் சென்று விட்டது!

இன்னும் ஒரு சில ஆண்டுகளுக்கு அவர் இந்தப் புவியில் இருக்க வேண்டும் என்பது புவனேசுவரியின் திரு உள்ளம் அல்லவா?

இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் காணப்படும் ஸ்வாமிஜியின் தெய்விகம் ததும்பும் தியான யோகக் கோலம் இங்கிலாந்தில் அவர் வாழ்ந்த காலத்தைச் சேர்ந்ததுதான். எல்லாவற்றிலுமே தெய்விகத்தைக் கண்டு பிரேமை பூணும் ஓர் ஒப்பற்ற மன நிலையில் ஸ்வாமிஜி அப்போது இருந்தார். 'ஸ்வாமி விவேகாநந்தரே இந்தக் கடிதத்தில் வாழ்கிறார்' என்று அவரது சரிதத்தைச் சமைத்த சீடர்கள் கூறும் விதத்தில் பிரேமையின் மகா சாஸனமாக ஸ்வாமிஜி லெக்கெட்டுக்கு ஓர் அமுத மடல் எழுதியது இச்சமயத்தில் தான். கடலை அன்பைத் தேக்கிய அம்மடலின் சில அலைகளை இங்கு ரசிப்போம்:

'சாத்தான் என்று ஒருவன் இருந்தால் அவனைக் கூட நேசிக்கும் நிலைக்கு நான் மெல்லச் சென்று கொண்டிருக்கிறேன்.

'இருபது வயசு இளைஞனாக இருந்த போது நான் சற்றும் விட்டுக் கொடுக்காதவனாக இருந்தேன். தீமை என்று எண்ணியவற்றிடம் சிறிதும் அநுதாபம் காட்டாமல் தீவிரமாக இருந்தேன். கல்கத்தா சாலைகளில் நாடக மன்றங்கள் உள்ள தெருவில்கூட நான் நடக்க மாட்டேன். அதே நான், இப்போது முப்பத்து மூன்றாவது வயசில் தாஸிகள் வசிக்கும் ஒரு விடுதியில், அவர்களைப் பற்றித் தவறாக ஒரு வார்த்தை நினையாமல், உடன் வாழக்கூடியவனாக இருக்கிறேன். அப்படியானால் நான் தாழ்ந்து போய் விட்டேன் என்று அர்த்தமா? அல்லது சாக்ஷாத் பிரபுவின் வடிவமாகிய பிரபஞ்சத்தின் பரிமாணத்தில் என்னை நான் விஸ்தரித்துக் கொள்கிறேனா? சுற்றியுள்ள தீமையைத் தீமையாகக் காணவிட்டால் உலகுக்கு நல்லது செய்ய முடியாது... என்று சிலர் சொல்கிறார்கள். ஆனால் நான் அப்படி நினைக்கவில்லை. மாறாக இப்போது தான் வேலை செய்கிற ஆற்றல் என்னிடம் அபரிமிதமாகப் பெருகியுள்ளது; அதன் பலனும் இப்போதுதான் அபரிமிதமாக இருக்கிறது. சில நாட்களில் நான் ஒருவித பரவச நிலையை அடைந்து விடுகிறேன். எல்லாரையும், எல்லாவற்றையும் அநுக்கிரஹிக்க வேண்டும் என்று ஆர்வம் கொள்கிறேன்.....

'நான் பிறந்த இனத்தை வாழ்த்துகிறேன். இன்று — இந்த மண்ணுலகில் — நான் எத்தனையோ அன்னையும், தந்தையையும் பெற்று விட்டேன். பூரணப் பிரேமையாகிய எது என்னை இங்கு படைத்ததோ, அது என்னுடைய நல்ல காரியங்கள், கெட்ட காரியங்கள் சகலத்தையும் ரட்சித்திருக்கிறது. நான் யார்? எப்போதுமே அவனுடைய கையிலுள்ள ஒரு கருவி என்பதைத் தவிர நான் யார்? அவனுடைய பணிக்காகத்தானே நான் எனது சகலத்தையும் — என் அன்பு மனிதர்களை, என் இன்பத்தை, என்வாழ்வை நீத்து விட்டேன்? அவன் என்னோடு விளையாடுகிற அன்பன். நான் அவனுடைய விளையாட்டுத் தோழன். இந்தச் சராசரத்தில் அர்த்தமோ அறிவோ எதுவும் கிடையாது. எந்த அறிவால் அவனைக் கட்ட முடியும்? லீலை செய்கிற அவன் ஒருவனே இத்தனை கண்ணீரையும், சிரிப்புக்களையும் விளையாடுகிறான்...... இது வேடிக்கையான உலகம். இதில் நிரம்பவும் வேடிக்கையானவன் அவனே. ஆதி அந்தமற்ற அன்பனாகிய அவனை விட வேடிக்கையை நீங்கள் காண முடியாது.

'ரொம்ப வேடிக்கை இல்லை? இன சமுதாயமெல்லாம் இந்தப், பரந்த மைதான

மாகிய உலகத்தில் சகோதரர்களாக, தோழர்களாக விளையாடுவதற்காக விடப்பட்டிரும் மானிக் குழந்தைகளின் சங்கமே அல்லவா? இதில் யாரைப் புகழ்வது? யாரைப் பழிப்பது? எல்லாம் அவனது லீலையல்லவா? விளக்கம் வேண்டும் என்கிறார்கள். ஆனால் அவனே எப்படி விளக்க இயலும்? அவனுக்குப் புத்தி கிடையாது. அவனுக்கு அறிவு முறைகளும் கிடையாது. நமக்குச் சின்னஞ் சிறிய புத்தியையும் அறிவு முறைகளையும் தந்து அவன் நம்மை முட்டாளாக்குகிறான். ஆனால் இப்போது நான் முட்டாளாக மாட்டேன். இனி என்னைத் தூங்குமூஞ்சியாக அவன் காண மாட்டான்.

'ஏதோ ஒரிரு விஷயங்கள் கற்றிருக்கிறேன்; அறிவுக்கும் படிப்புக்கும் பேச்சுக்கும் அப்பால் — அப்பாலுக்கும் அப்பால்—'அன்பு' என்ற உணர்ச்சியும் 'அன்பன்' என்ற உணர்ச்சியும் இருக்கின்றன. தோழா, வா. கிண்ணத்தை நிரப்பு; நாம் போதை கொள்வோம்.'

அன்புக் கிண்ணத்தை வழிய வழிய நிரப்பி உட்கொண்டு தெய்வ போதை பெறத் துடித்தார் ஸ்வாமிஜி. சாதாரண மது போதையில் புத்தி கெட்டுப் போகும். ஆண்டவனின் மதுர போதையிலோ புத்தி அற்றே போய் விடும். அந்த நிலையைத்தான் ஸ்வாமிஜி நாடினார். புத்தியற்றவனை நாம் முட்டாள் என்போம். ஸ்வாமிஜியோ காரண காரியத்தை நாடும் இந்தப் புத்தியே முட்டாள்தனமென எண்ணும் அளவுக்கு, இதயத்தில் சுரக்கும் காரிய காரணமற்ற அன்பு ஒன்றுக்காகவே அலைந்தார்.

முன்பு ஸ்வாமிஜி லண்டனுக்கு வந்திருந்த போதே மார்கரெட் நோபில், ஈ.டி. ஸ்டர்டி, குமாரி முல்லர் உள்படப் பல அத்யந்த சிஷ்யர்களைப் பெற்றிருந்தார். இம்முறை ஸேவியர் தம்பதியரைத் தமது பேரன்புச் சீடர்களாகப் பெற்றார். 'சீடர்களாக' என்று மட்டும் சொன்னால் போதாது. அவர்களைத் தமது தாய் தந்தையர் போலவும் கருதினார் ஸ்வாமிஜி. அதே போல் அவர்களும் ஸ்வாமிஜியை ஆசாரியனாகக் கண்ட போதே தங்கள் பிள்ளை போலவும் பாவித்தனர். காப்டனாக இருந்து ஓய்வு பெற்றிருந்த ஸேவியர் நீண்ட காலம் இந்தியாவில் பணியாற்றி யிருந்தவர். ஸேவியர் தம்பதி உண்மையான ஆத்மிகத்துக்கு அருட் தாகம் கொண்டிருந்தனர். எந்த மதமும் அவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. இச்சமயத்தில்தான் ஸ்வாமிஜியின் உரையொன்றைக் கேட்டவுடன் அவ்விருவரும் ஒன்றே போல், 'இந்த மனிதர்தான் நாம் தேடியவர்; இந்தத் தத்துவம்தான் நாம் தேடியது' என்று உணர்ந்தனர்.

"நான் ஸ்வாமிஜியின் சீடனாவதற்கு அநுமதிப்பாயா?" என்று தமது மனைவியைக் கேட்டார் ஸேவியர்.

"ஓ!" என்ற ஸ்ரீமதி ஸேவியர், "நான் ஸ்வாமிஜியின் சிஷ்யை ஆவதற்கு அநுமதிப்பீர்களா?" என்று திரும்பக் கேட்டாள்.

"நிச்சயமாகச் சொல்வதற்கில்லை" என்று அன்புச் சிரிப்போடு கூறினார் அவளது பதி.




பிரபல பிரெஞ்சுக்காரரான வால்டர் உருவில் சிறுத்தவர்; மூளையில் பெருத்தவர். அவரது 'ஸாடிக்' என்ற கதையில் வரும் கிராண்ட் மாகி, ஸாடிக்கைப் பார்த்துப் பின்வரும் கேள்வியைக் கேட்கிறார்:

"உலகத்தில் மிக நீளமானதும் மிகக் குறுகியதும், மிக வேகமானதும், மிக மெதுவானதும், மிகவும் சிறியதாகக் கூடியதும், மிகவும் பெரியதாகக் கூடியதும், மிகவும் அலட்சியம் செய்யப்படுவதும், அப்படி அலட்சியம் செய்து விட்டதற்காகப் பிறகு மிகவும் வருத்தப்படச் செய்வதும், அற்பமானவற்றை எல்லாம் நசிக்கச் செய்வதும், மேலானவற்றை ஜீவித்திருக்கச் செய்வதுமான அது எது?"

இந்தக் கேள்விக்கு ஸாடிக் சரியான பதிலளித்து விட்டார். உங்களால் முடியுமா?

ஸாடிக் கூறிய பதில்: காலம்.

கணவன் — மனைவி உறவு போய் ஸ்வாமிஜியின் சீடர்கள் என்பதாகப் புது உறவை அவர்கள் தொடங்கினர். ஸ்ரீமதி ஸேவியரை ஸ்வாமிஜி முதன் முறை கண்டவுடனேயே "அம்மா" என அழைத்தாரெனில் அவளது பக்குவத்தை ஊகிக்கலாம்.

உழைத்துக் களைத்த ஸ்வாமிஜிக்கு இடம் மாறி இருக்க எண்ணம் ஏற்பட்டது. இச்சமயத்தில் அவர்களுடைய நண்பர்களின் அழைப்பும் கிடைத்ததால் ஐரோப்பாக் கண்டத்தில் இதர நாடுகள் சிலவற்றுக்குச் செல்லத் தயாரானார் ஸ்வாமிஜி.

ஜூலை மாதப் பிற்பகுதியில் பயணம் தொடங்கிற்று. அழகுக் களஞ்சியமான ஸ்விட்ஸர்லாந்தின் நீர்நிலைகளில் மனம் கொண்ட மட்டும் ஸ்நானம் செய்து புத்துணர்ச்சி பெற்றார் ஸ்வாமிஜி. மலைத் தொடர்கள் மீதும் 'க்ளேஸியர்' எனப்படும் நகரும் பனிப்பாறை மீதும் சஞ்சரித்தார்.

பனி மூடிய முகடுகள் நாற்புறமும் சூழ்ந்திருக்க, நடுவில் எழில் கொஞ்ச அமைந்துள்ள ஒரு கிராமத்தில் வந்து தங்கினர். ஸ்வாமிஜியின் உணர்வுகள் தமது உச்சத்தை அடைந்தன. மோனத்தில் ஆழ்ந்து தபஸ்வியாகத் தியானம் செய்யலானார்.

இச்சமயத்தில் தமது அமெரிக்க சிஷ்யை ஸ்ரீமதி புல்லுக்கு ஸ்வாமிஜி எழுதினார்:

"வேலையை நான் தொடங்கியாயிற்று. இனி மற்றவர்கள் அதைப் பூர்த்தி செய்யட்டும். பணியைச் செய்ய வேண்டும் என்பதற்காக நான் சிறிது காலம் பணத்தைத் தொட்டு என்னை அசுத்தமாக்கிக்கொள்ள வேண்டியதாயிற்று. என் பங்கை நான் முடித்தாகி விட்டது. இப்போது நிச்சயமாக எண்ணுகிறேன்: வேதாந்தத்திலோ, உலகின் வேறெந்தத் தத்துவ சாஸ்திரத்திலோ, வேலையிலோ இனி எனக்கு ஒரு அக்கறையும் இல்லை.

நான் புறப்பட ஆயத்தமாகி வருகிறேன். உலகம் என்ற இந்த நரகத்துக்கு ஒருபோதும் திரும்பி வராமல் புறப்பட ஆயத்தமாகிறேன்.... கர்மம், பிறருக்கு நன்மை செய்வது இவையெல்லாம் கூட மனதைத் தூய்மைப்படுத்திக் கொள்வதற்கான சிறு பயிற்சிகளே. அவற்றை நான் வேண்டிய அளவு பயின்றாயிற்று.''

ஸ்வாமிஜியின் உள்ளம்தான் எத்தனை விதமாகச் சிந்தித்திருக்கிறது? உலகையெல்லாம் மோட்ச சாம்ராஜ்யமாக இவர் கண்ட நாளும் உண்டு. அதுவே அவருக்கு நரகமானதும் உண்டு. தெரியாமலா சித்தன் போக்கு சிவன் போக்கு என்று சொன்னார்கள்?

ஒருநாள் ஸ்வாமிஜி தியான சமாதி நிலையிலேயே தன்னைத் தனியாகத் தமது சிஷ்யர்களிடமிருந்து பின்தங்கிச் செங்குத்தான விளிம்பொன்றின் அருகே வந்து விட்டார். திடீரென அவர் உலவிக் கொண்டிருந்த இடம் சரிந்து விழலாயிற்று. ஸ்வாமிஜி செங்குத்துச் சரிவில் வழுக்கி விழாமல் அன்று மரணத்தின் வாயிலிருந்து தப்பியது ஓர் அற்புதம்தான்!

காலபாசத்திலிருந்து மயிரிழையில் தப்பிய ஸ்வாமிஜி தமது மற்றச் சீடர்களுடன் இருக்கைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். அங்கே ஒரு சிறு மாதா கோவில் சாந்தி பூத்துக் காட்சி அளித்தது.

ஸ்ரீமதி செவியரைப் பார்த்தார் ஸ்வாமிஜி. ''கன்னி மாதாவுக்கு என் பெயரில் புஷ்பக் காணிக்கை செலுத்தி வாருங்கள். அவளும் என் சர்வேசுவரியே'' என்றார்.

ஸ்வாமிஜி இந்தக் கிராமத்திலிருக்கும் போது ஜெர்மனியில் கியல் (Kiel) பல்கலைக் கழகத்தில் தத்துவப் பேராசிரியராக இருந்த பால் தாஸெனுடைய — தேவஸெனர் எனப் படுபவர் — அழைப்பைப் பெற்றார். வேதாந்தத்தில் பெரும் பற்றுக் கொண்டிருந்தவர் தாஸென். சம்ஸ்கிருதத்திலேயே சரளமாகச் சம்பாஷிக்கக் கூடிய ஆற்றல் பெற்றிருந்தார் அவர்.

ஸ்வாமிஜியும் தாஸெனும் சந்தித்தனர். இரு அறிவு மலைகளின் சந்திப்பாக அது அமைந்தது.

தாஸெனின் நூல்நிலையத்தைப் பார்வையிட்ட ஸ்வாமிஜி கவிதைப் புத்தகமொன்றைப் பிரித்துப் படிக்கலானார். அப்படியே அதன் பொருளில் மூழ்கி விட்டார். மன ஒருமைப்பாடு என்பது எவ்வளவு எளிதில் அவருக்குக் கைவரும் என்பதைத்தான் முன்பே பலமுறை பார்த்திருக்கிறோமே! தாஸென் ஸ்வாமிஜியிடம் ஏதோ கேட்டார். கவிதையின் கருவிலே ஊறிக் கொண்டிருந்த ஸ்வாமிஜியின் செவியில் அந்த வினா விழவில்லை. பிற்பாடு தான் அவருக்குப் பேராசிரியர் வினவியதாகவும், தாம் பதில் சொல்லாதிருந்ததாகவும் தெரிய வந்தது. மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். என்றாலும் தாஸெனுக்கு உள்ளூற நம்பிக்கை வரவில்லை — இப்படிக்கூட ஒரு பொருளில் லயித்துவிட முடியுமா என்று. அவரைத் திருப்திப்படுத்துவதற்காக ஸ்வாமிஜி சம்பாஷணையில் பேச்சோடு பேச்சாகத் தாம் அப்போது படித்த கவிதையிலிருந்து நீண்ட நீண்ட பல பகுதிகளை ஒப்பித்தார்.

யோக சக்தியினால் எப்படி மனோலயம் கிடைக்கும் என்பதை ஸ்வாமிஜி தாஸெனுக்குப் பிரத்தியட்சமாக நிரூபித்துவிட்டார்!

ஆறு வார காலம் பயணத்தில் சென்று விட்டது. பல ஐரோப்பிய நாடுகளைக் கண்டு மகிழ்ந்த ஸ்வாமிஜி மீண்டும் இங்கிலாந்துக்குத் திரும்பினார்.

செப்டம்பர் மாதத்தில் சிகாகோ சகோதரி ஹென்ரியட் ஹேலின் திருமணச் செய்தி கிடைத்தது. ஸ்வாமிஜி ஓர் அற்புதமான மடல் வரைந்து சகுந்தலைக்குக் கண்வர் புத்தி கூறியது போல் ஹிதோபதேசம் செய்தார். ''மனித குலத்தில் தொண்ணூற்றொன்பது சத விகிதத்தினருக்குத் திருமணம்தான் மிக உண்மையான லட்சியம்'' என்று ஞானிக்கே உரிய தயாள குணத்துடன் அதில் கூறினார்.

ஸ்வாமிஜிக்கு உதவிபுரிவதற்காக அபேதானந்தரும் இப்போது இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தார். அபேதானந்தரை அவ்வப்போது பேசுமாறு செய்து தாம் விலகி நின்று, குழந்தையின் சிறப்பைக் காணும் தாய் போல ஸ்வாமிஜி மகிழ்ந்து நின்ற பான்மையை அவரது வரலாற்று ஆசிரியர்கள் வியக்கிறார்கள்.

பாரதத்தின் பண்பே அதுதானே? ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமது வித்தையை அவ்வளவையும் மிச்சம் மீதி இல்லாமல் சிஷ்யர்களுக்கு அளித்த குரு பரம்பரையால் உருவானதல்லவா பாரத சமய வரலாறு?

அலம்பஜாரில் ஒன்றுதிரண்டிருந்த குருபாயிகளுக்கு 1896ம் ஆண்டு ஏப்ரில் இறுதியில் ஸ்வாமிஜி எழுதிய கடிதத்தில் மடத்தின் நிர்வாகத்தைப் பற்றி என்ன கூற வேண்டுமோ அவைகளையெல்லாம் கூறியுள்ளார். இந்தக் கடிதத்தைப் படித்தால், 'நான் ஸ்தாபகன் அல்ல; போதகனே' என்று அவர் அடிக்கடி சொன்னதைநாம் முழுவதும் நம்புவதற்கில்லை.

ஹிமாலயத்திலும், கல்கத்தாவிலும், சென்னையிலும் மடங்கள் நிர்மாணிப்பது பற்றி ஸ்வாமிஜி இச்சமயத்தில் எண்ணி வந்தார். வங்கத்துக்கு இணையாகத் தமிழகத்தையும் அவர் நினைந்தது நம் தமிழ் நாட்டின் பரந்தஉள்ளத்துக்கு ஒரு பாராட்டேஅல்லவா?

மடங்களை நிறுவியதோடு, சஞ்சிகைகள் மூலமும் ஆத்மிகத்தைப் பரப்ப அவர் ஆசைப்பட்டார். இதிலும் தமிழகம்தான் முன் நின்றது. 'பிரம்மவாதின்' என்ற ஆங்கிலப் பத்திரிகையை அது வெளியிட்டு வந்தது.

தாய் நாட்டு நினைவு மிகுந்து விட்டது ஸ்வாமிஜிக்கு. தாயிடம் திரும்பத் துடித்தார் அந்தத் தவப் புதல்வர்.

நவம்பர் மாத மத்தியில் திடீரென ஒரு நாள் ஸ்வாமிஜி ஸ்ரீமதி செவியரிடம் கொழும்புக்குக் கப்பல் டிக்கெட் எடுக்கச் சொன்னார்.

ஆம், அன்று அநாமதேய ஏகாங்கியாக வெளிநாடு சென்ற பாரத புத்திரன் இதோ வேதாந்த வேந்தனாகத் தாயகம் திரும்பப் போகிறான்!

(தொடரும்)

# வழக்கறிஞர் வரிசை

மேலை நாடு ஒன்றில் நடந்ததாகச் சொல்லப்படும் வழக்கு ஒன்றில், ஒரு ரயில்வே நிலயத்துக்குப் பக்கத்தில் வசித்து வந்த மாது ஒருத்தி ரயில்வே நிர்வாகத்தின் மீது நஷ்ட ஈடு கோரி மனுச் செய்திருந்தாள். வழக்கு நீதிமன்றத்துக்கு வந்தது. ரயில் இஞ்சினிலிருந்து கிளம்பிய தீப்பொறி ஒன்றினால் அவள் வீட்டீ தீப்பிடித்துக் கொண்டதாம்.

ரயில்வே நிர்வாகத்தின் சார்பில் ஆஜரான வழக்கறிஞர் வெகு அலட்சியமாக 'பிரஸ்தாப ரயில் அந்த ஸ்டேஷனில் நான்கே நிமிடங்கள் நின்றிருப்பதாக தஸ்தாவேஜுகள் சொல்லுகின்றன. அந்த ரயில் புறப்படும் போதே பிரஸ்தாப வீடு எரிந்துகொண்டிருந்ததாக இஞ்சின் ஷெப்பந்திகள் ஸ்டேட்மெண்டு கொடுத்திருக்கிறார்கள். ஆகவே இந்த ரயில் தான் விபத்துக்குக் காரணம் என்று சொல்லுவது நம்பமுடியாத விஷயம்' என்றார்.

வாதியின் வக்கீல் எழுந்திருந்தார். சட்டைப் பையிலிருந்த ஒரு 'பை' கடிகாரத்தை எடுத்து நீதிபதி முன் வைத்தார். 'தயவு செய்து நான்கு நிமிட நேரம் ஆன பிறகு சொல்லுங்கள்' என்று சொல்லி உட்கார்ந்தார். கோர்ட்டில் ஒரே அமைதி: விநாடிகள் தயங்கி ஊர்ந்து செல்வது போல் ஒரு பிரமை. குறிப்பிட்ட நான்கு நிமிட அவகாசம் நான்கு மணி அவகாசத்தை எடுத்துக் கொண்டதோ என்று நினைக்கும்படி அந்த அமைதி இருந்தது.

நான்கு நிமிடங்கள் ஆயின என்பதை நீதிபதி அறிவித்தார். 'என் வாதம் அவ்வளவு தான்' என்றார் வாதியின் வக்கீல். அவர் தான் வாய் திறவாமலே சூழ்நிலையின் உதவியால் நான்கு நிமிட அவகாசம் என்பது எவ்வளவு நீளமானது என்பதை நிரூபித்து விட்டாரே!

ரயில்வே நிர்வாகம் நஷ்ட ஈட்டைக் கொடுத்தது!

நீதி மன்டப வாதங்களில் மனித சுபாவத்தை ஆராய்ந்து அதற்குத் தகுந்தாற்போல வாதங்களைக் கொண்டுபோய்த் திருப்பம் கொடுத்து வெற்றி தேடுவதற்கு அனுபவமும், ஆழ்ந்த சட்ட ஞானமும் நிறையப் பொறுமையும் தேவை. இந்த 'மனித மன' ஆராய்ச்சிப் பயிற்சியில் அனுபவம் பெற்றிருக்கும் பல சிறந்த வழக்கறிஞர்களில் கன்வேயன்ஸிங் (Conveyancing) என்று குறிப்பிடப்படும் டாக்குமெண்டுகள், உயில்கள் துறையிலும், வருமான வரி சட்டத் துறையிலும் கவனம் செலுத்தும் திரு பி. சீனிவாசய்யங்காரை ஓர் உதாரணத்துக்காக எடுத்துக் கொள்ளலாம்.

தஸ்தாவேஜுகள் சம்பந்தப்பட்ட ஒரு வழக்கு. ஓய்வு பெற்ற சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவர் குறிப்பிட்ட ரிக்கார்டில் காணப்படும் கையெழுத்து தம்முடையதாக இருக்க முடியாது என்று சொல்லிவிட்டபடியால் அவரைக் குறுக்கு விசாரணைக்காக வரவழைத்தார்கள். விசாரணை ஆரம்பமாயிற்று.

அவர் கையெழுத்தா இல்லையா என்று பட்டென்று கேட்டுப் பதில் வாங்கிவிட்டால் அப்புறம் சுவாரஸ்யம் ஏது? சர்க்கார் காரியாலயங்களில் பைல்களும் ரிக்கார்டுகளும் அதிகாரிகள் கையெழுத்துக்காகப் போகும் முறை, அவசர அடையாளங்களுடன் பைல்கள் கொண்டு போகப்படும் வழக்கம் முதலியவற்றைப் பற்றிப் பொதுப்படையான கேள்விகளை விடுவிடு வென்று கேட்டுக் கொண்டே வந்து சில சந்தர்ப்பங்களில் அவசரத்தில் பைல்களைப் படிக்காமலே கையெழுத்துப் போடுவதும் உண்டு என்ற பதிலை வாங்கும் கட்டத்தைக் குறுக்கு விசாரணை செய்த வக்கீல் சற்று நேரத்தில் அடைந்து விட்டார். இதுவரை சும்மா இருந்த எதிர்த்தரப்பு வக்கீல் திடீரென்று நிலைமையை உணர்ந்து ஆட்சேபணை எழுப்பியபோது நீதிபதி அந்த ஆட்சேபணையை ஏற்றுக் கொள்ளவில்லை. மனித இயல், மனோதத்துவம் முதலியவற்றின் அடிப்படையில் நடந்த இந்த விசாரணையை ஆரம்பத்திலேயே கவனித்து ஆட்சேபிக்காமல் 'ஆமாம்' என்ற பதிலைக் கூறுமலே கூறிவிட்ட தருணத்தில் ஆட்சேபிப்பதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. விசாரணை நியாயமானதே என்று ஒப்புக் கொண்டாராம். இப்படி அந்த அடிப்படையில் தம் வாதத்தை ஓட்டியவர் திரு பி. சீனிவாச ஐயங்கார்.

தந்தை ரயில்வே இலாகாவில் பணியாற்றியவர். குமாரரோ வழக்கறிஞராக வர ஆசைப்பட்டார். அப்படித் துணிந்து நுழைந்தும் அவருக்குக் கிடைத்த உபதேசம் உற்சாகம் நிறைந்ததாக இல்லை. 'இதோ பார்!



திரு பி. சீனிவாச ஐயங்கார்

இன்னும் பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு எவ்விதமான வரும்படியையும் எதிர்பார்க்காமல் முன்னோர்கள் வைத்திருக்கும் 'சொத்தை நம்பிச் சாப்பிட்டுக் கொண்டு ஜூனியராக இருந்து தொழில் நுணுக்கம் தெரிந்து கொண்டால் அதன் பின் தொழிலுக்கு நல்ல பிரகாசம் கிடைக்கும். அதற்குத் தைரியம் உண்டா? இல்லையானால் ஜில்லா முனிசிப் தேர்வுக்கு மனுப் போட்டுவிட்டுப் பேசாமல் அந்த வழியில் ஒதுங்கி விடு. அரை குறை ஞானமும், அவசரமும் இந்தத் தொழிலுக்கு ஏற்றதல்ல'' என்று சொன்னவர் அவருடைய சீனியராக இருந்த திரு டி.ஜி. ஆச்சார்யா. இது நடந்தது 1932ம் ஆண்டில். திரு ஐயங்கார் இந்த யோசனையை முழு மனத்துடன் ஏற்றுக்கொண்டு கடைப் பிடித்தார். ஏறத்தாழப் பதினைந்து ஆண்டுகள் ஜூனியராகவே இருந்தார். திரு ஆச்சாரியாவைத் தவிர திரு அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரும், திரு வி. வி. சீனிவாச அய்யங்காரும் இவருக்குத் தொழில் கற்றுக் கொடுத்த ஜாம்பவான் சீனியர்களாவார்கள்.



"நீங்க இனிமே குறைஞ்சது வாரத்துக்கு நாலு கதையாவது எழுதி அனுப்புங்க. அப்பத்தான் அதெல்லாம் திரும்பி வந்ததுன்னா ஒரு பெரிய கூடையாவது செய்யறதுக்குப் போதும்."

திரு வி. வி. சீனிவாசய்யங்காரிடம் அவர் தொழில் கற்றுக் கொண்ட நாட்களில் சீனியர் வி. வி. எஸ்.ஸுக்கு ஜூனியர்களுடன் கேஸ் விஷயமாக விவாதிக்கவோ அவர்கள் எடுத்துக் கொடுக்கும் குறிப்புக்களைப் படித்துப் பார்க்கவோ இரவு பதினொரு மணிக்கு மேல்தான் சாவகாசம் கிடைக்கும். அநேகமாக இரவு ஒரு மணி வரை ஜூனியர்கள் கண் விழித்திருப்பார்கள். இத்தனை வருடங்களாகியும், ஜூனியர் சீனியராகியும் இரவு கண் விழித்திருக்கும் பழக்கம் திரு ஐயங்காரை விடவில்லை. இன்றும் இரவு ஒரு மணி வரை கண்விழித்து ஏதாவது புத்தகம் படித்துக் கொண்டிருந்து விட்டுத்தான் படுக்கைக்குப் போகிறார்.

இவருக்கு முக்கிய பொழுதுபோக்கு தோட்ட வேலை. அத்துடன் 'காண்ட்ராக்ட் பிரிட்ஜ்' என்னும் சீட்டாட்டத்திலும் ஆர்வம் உண்டு. அந்த விளையாட்டில் பல கோப்பைகளையும் பரிசாகப் பெற்றிருக்கிறார்.

சீனிவாச ஐயங்கார் தம்மிடம் வரும் வழக்குகளை ஏற்றுக் கொள்வதிலும் இந்தச் சீட்டாட்டத் தத்துவம் பரிணமித்திருக்கும். அவரிடம் கொண்டு வரப்படும் வழக்கில் உண்மைக்குப் புறம்பான விஷயம் இல்லையென்று நிச்சயமாகத் தெரிந்த பின்னரே அதற்காக வாதாட ஒப்புக்கொள்வார். சற்றுச் சந்தேகம் எழுந்தாலும், வழக்கில் வலு இல்லை என்று பளிச்சென்று சொல்லி ராஜி செய்துகொண்டு போவது நலம் என்று அறிவுரை கூறுவார். சிலசமயங்களில் இவருக்கு எதிர்த் தரப்பில் வாதாடும் வழக்கறிஞரிடமும் தம்மிடம் இருக்கும் வலுவான 'பாயின்டு'களையும் தஸ்தாவேஜுகளையும் பற்றி விஷயத்தைச் சொல்லிக் காலதாமதமும், பண விரயமும் ஏற்படுவதைத் தவிர்த்துச் சமாதானமாக ராஜி செய்து கொள்ள வழி ஏற்படுத்திவிடுவார்.

வெளியூருக்குச், சில யந்திரங்கள் அனுப்புவதில் குறிப்பிட்ட சில சர்ட்டிபிகேட்டுகள் சரியாகப் பூர்த்தி செய்யாத நிலையில் சாமான்கள் நிராகரிக்கப்பட்டன. அனுப்பியவருக்கும் ஆர்டர் கொடுத்தவருக்குமிடையே தோன்றிய அபிப்பிராய பேதம் வழக்கில் வந்து முடிந்தது. எதிர்த்தரப்பு வக்கீல் எட்டாயிரம் ரூபாய் காம்பன்சேஷன் கொடுத்தால் வழக்கை ராஜி செய்து கொள்ளலாம் என்றார். எதிர்த்தரப்பின் கோரிக்கை நியாயமானது என்று திரு ஐயங்காருக்குத் தோன்றியது. உடனே தம் கட்சிக்காரரைக் கூப்பிட்டு அந்த ரூபாயைக் கொடுக்கும்படி யோசனை சொன்னார். கட்சிக்காரர் தயங்கினார். அவ்வளவுதான். வக்கீல், கேஸ் சம்பந்தமான அத்தனை கட்டுகளையும் எடுத்துக் கட்சிக்காரர் முன் வைத்து, 'மேற்கொண்டு வாதாட வேறு வக்கீலின் உதவி நாடிப் போகச் சொல்லிவிட்டார். இதன் பிறகு அந்தக் கட்சிக்காரர் நேர்மைக்குக் கட்டுப்படாமல் இருக்கமுடியுமா? ஐயங்காருடைய யோசனையை ஏற்றுக்கொண்டார்.

'முன்னுக்கு வர ஆர்வமுள்ள இளம் வழக்கறிஞர்கள் குறைந்தபட்சம் ஐந்து ஆண்டுகளாவது எந்த விதப் பிரதிப் பிரயோசனத்தையும் எதிர்பார்க்காமல் அனுபவம் மிக்க சீனியர் ஒருவரிடம் பயிற்சி பெற வேண்டும். அந்தப் பயிற்சிக்காலத்தில் அலுக்காமல் சலிக்காமல் சட்டங்களைப் படித்து மனத்தில் வாங்கிக்கொள்ள வேண்டும். நேர்மை, கடமை உணர்ச்சி, மனிதப் பண்புகளைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் முதலியவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்' என்று இன்று தொழிலில் புக விரும்பும் இளைஞர்களுக்குப் புத்திமதி கூறும் அனுபவம் மிக்க திரு ஐயங்காருக்கு மிகவும் பிடித்தது பக்தி மார்க்கமும், தோட்ட வேலையும் ஆகும். பிடிக்காதது, வம்புப் பேச்சு!

எத்தனையோ புதுப் புதுத் துறைகள் சட்ட உலகில் தோன்றிக் கொண்டிருக்கும் இந்த நாளில் எல்லாவற்றிலும் நுனிப் புல் மேயாமல் ஒரே துறையில் விசேஷ கவனம் செலுத்துவது, கட்சிக்காரர்களுக்கும் வக்கீலுக்கும் நல்லது என்று தமது ஜூனியர்களிடம் சீனிவாச ஐயங்கார் அடிக்கடி கூறுவார்.

அவரது துறையில் இரண்டு இளம் வழக்கறிஞர்கள் அவரிடமே ஜூனியர்களாக இருந்து பயிற்சி பெறுகிறார்கள்.



ரெமிங்டன்ரேண்ட் ஸ்தாபனத்தைச் சார்ந்த திரு கே. ஹரிஹரன் அவர்களுக்கும், மேற்படி கம்பெனியைச் சார்ந்த திரு அருந்ததிக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க · மணமக்கள்!



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414, மதராஸ்-5
தந்தி: EVERMANS போன்: 86834

சேரக் கடைசி தேதி 13-5-1964 ... முதல் ஏலத் தேதி 15-6-1964

25 மாதங்கள் | **மாதாந்திரச் சீட்டுகள்** (3-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

40 மாதங்கள் **நீண்டகால ஏலச் சீட்டுகள்** 40 அங்கத்தினர்கள்
ஏலத் தேதி: 24-5-1964

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| A | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| B | ரூ. 250/- | ரூ. 10,000/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.
(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

இதர கிளைகள்: புது டெல்லி * பம்பாய் * பெங்களூர் * கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

குணததில சிறநதவை

# ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு

15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்

ARUNA

# ஹெர்குலிஸ் வெறும் ஸைக்கிள் மட்டுமன்று—

வாழ்நாள் முழுதும் உழைக்கும் உறுதுணை



மளிகைக் கடைப்பணியாளாக கோவிந்தன் வாழ்க்கையைத் தொடங்கிய சமயம் அது. தொழிலுக்கு உதவியாக புது ஹெர்குலிஸ் ஸைக்கிள் ஒன்றை வாங்கினான். திறமைசாலியான கோவிந்தன், இன்று கடையின் முதலாளி, அன்று போலவே இன்றும், நம்பிக்கைக்கு உகந்த ஹெர்குலிஸ் ஸைக்கிள் அவருக்கு இன்றியமையாத சேவை புரிந்துவருகிறது.

இந்தியாவிலேயே மிகப் பெரியதும், பல நவீன யந்திரங்கள் கொண்டதுமான தொழிற்சாலையில், மிக நுட்பமான முறையில் தயாராகிறது ஹெர்குலிஸ். ஸைக்கிள் தயாரிப்பில் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனமான ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட் (இங்கிலாந்து) ஸ்தாபனத்தின் பரந்த தொழில் நுட்ப அறிவும், நிறைந்த அனுபவமும் சேர்ந்து உருவாக்கிவரும் ஹெர்குலிஸ் ஸைக்கிள், நீடித்து உழைப்பதில் ஆச்சரியம் என்ன ?



டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, மதறாஸ்-53

# ராஜியின் ஆசை

'டிங் டிங்!' என்று மணியோசை கேட்டது. பள்ளிக்கூடம் விட்டாகி விட்டது. கூண்டில் அடைபட்டிருந்த பட்டாம்பூச்சிகளுக்கெல்லாம் விடுதலை. அரையும் குறையுமாகப் புத்தகங்களை வாரியெடுத்துக் கொண்டு எல்லாச் சிறுவர் சிறுமிகளும் வெளியே வந்தார்கள். தாழ்ந்த கட்டடம் ஆதலால் உள்ளே அசாத்தியப் புழுக்கம். வெளியே வந்து கொஞ்சம் இயற்கைக் காற்று உடலில் பட்ட பிறகுதான் அந்தக் குழந்தைகளுக்கு வயதுக்குரிய உற்சாகம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

அவர்களுடைய உற்சாகத்தை அதிகப்படுத்துகிற மாதிரி ஒரு சினிமா வண்டி வந்து நின்றது. பள்ளிக்கூடத்துக்குச் சற்றுத் தள்ளினாற்போல்.

"அடியே, சரளா! இதோ பாருடி, குட்டிக் கமலினி" என்று உற்சாகமாகக் கூவினாள் பத்மா என்ற சிறுமி.

"ஆமாம், ராஜி! இங்கே வந்து பாரேன்" என்றாள் சரளாவும் அந்த வண்டியின் அருகில் வந்து நின்று கொண்டு.

சலிப்பும் சோர்வுமாக மெள்ள நடந்து வந்த ராஜி வண்டியினருகில் வந்து அதில் உள்ள வண்ணப் படங்களைப் பார்வையிட்டாள். முழு அகலத்துக்குச் சரிகை பார்டர், உடலெல்லாம் சரிகை வேலைப்பாடு. தகதகக்கும் பட்டுச் சொக்காய், ஒளியை வாரிச் சொரியும் நகைகள். புது மாதிரியான தலை அலங்காரம். இளவரசி போல் ஒயிலாகப் பிரபல நடிகையான ஆர். எஸ். எம்.மின் கையைப் பிடித்துக் கொண்டு நின்றாள் குட்டிக் கமலினி. அளவு கடந்த ஏக்கமும், எல்லையற்ற ஏமாற்றமும் ராஜியின் உள்ளத்தைக் கொத்திப் பிடுங்கின. துயரம் மேலிடத் தன் உடைகளைப் பார்த்துக் கொண்டாள்.

சாயம் போன கிழிந்த பாவாடை. யாரோ ஒரு



கே. ஜயலக்ஷ்மி

பெரிய வயது அம்மாள் அன்புடன் வழங்கிய இவளுக்குப் பொருந்தாத ஜாக்கெட். எண்ணெய் கண்டறியாத செம்பட்டை மயிர்த் தலை. எண்ணெய் வழியும் முகம். மற்றப்படி குட்டி கமலினிக்கும் ராஜிக்கும் ஒரு வித்தியாசமும் கிடையாது. கருவண்டுக் கண்கள். எடுப்பாக நிமிர்ந்து நுனியில் மட்டும் வளைந்துள்ள அழகான நாசி, புன்னகை சிந்தும் மெல்லிய இதழ்கள், சுருட்டை மயிர், உயரமும் பருமனும் ஒத்தாற்போல் அமைந்திருந்த உடம்பு. இவைகளெல்லாம் இருவருக்குமே ஒரே மாதிரிதான் அமைந்திருந்தன. ஒரு கொடியில், ஒரே காம்பில் மலர்ந்த இரு மலர்கள்தானே?

— அட்டைப் படக்கதை —

"அழ ஆரம்பித்து விட்டாயா ராஜி! அப்ப நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று ஓட்டம் பிடித்தாள் சரளா.

பொத்துக் கொண்டு வந்த அழுகையை அடக்கிக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தாள் ராஜியும். அவள் அழுதுதான் பயனென்ன! வருந்தித்தான் பலன் என்ன?

"ம...... ஸ்டோரிலே சர்க்கரை கொடுக்கிறாங்களாம். பையை வெச்சிட்டுப் போ. சீக்கிரம். க்யூவிலே நின்னு ஒரு கிலோவாம்."

வீட்டுக்குள்ளே நுழைவதற்குள்ளேயே விரட்டினாள் அத்தையம்மா.

பசியால் புரண்ட வயிறு. விழிகளால் தன் வேதனையையெல்லாம் வெளிக்காட்ட முயன்றது. உட்பக்கம் நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தாள் ராஜி.

"போகப் போறியா, இல்லாட்டி உதை இதை வாங்கப் போறியா?. போ. சீக்கிரம்! அதோ இருக்கு. பையும் துட்டும்..." வெந்தணலாக வந்து விழுந்தன வார்த்தைகள்.

திரும்பி நடந்தாள் ராஜி. அவளுக்குப் பசி ஒரு கேடா?

வளைந்து வளைந்து சென்று கொண்டிருந்த 'க்யூ' வரிசையில் அவளும் போய்ச் சேர்ந்து கொண்டு நின்றாள். அவளுடைய கருவண்டு விழிகளிலிருந்து கண்ணீர்த் திவலைகள் தரையை நோக்கிச் சரம் கோர்த்தன. 'கமலு அதிர்ஷ்டசாலி! பழச்சாறும் வெண்ணெய்ப் பிஸ்கோத்தும் சாப்பிட்டுக் கொண்டு பெரிய பங்களாவில் சந்தோஷமாக இருக்கிறாள்' என்று உள்ளம் பொருமியது.

இரட்டைக் குழந்தைகளைப் பிரசவிக்க உடலில் வலிமையற்ற தாய் பிரசவ அறையிலேயே கண்ணை மூடி விட்டாள். தகப்பனோ ஒரு ராக்ஷஸப் பிறவி. குழந்தைகள் அவனுக்குக் கால் தூசிக்குச் சமானம். அந்த நிலையில் எங்கோ ஒட்டிக் கொண்டிருந்த துளி மனிதாபிமானம் தலைவனின் குழந்தைகளைக் கை நீட்டிப் பெற்றுக் கொள்ள வைத்தது பட்டம்மாவை. அங்கே மட்டுமென்ன? குபேர சம்பத்தா? ஊஹூம். இங்கே முழுப் பட்டினி. அங்கே அரைப் பட்டினி. அவ்வளவு தான். எப்படியோ ஆறு வருடங்கள் சென்று விட்டன. இரண்டு பெண் மக்களையும் சர்க்கார் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டிருந்தாள் பட்டம்மா.

ஒரு நாள் இடரென்றுதான் அந்தச் சம்பவம் நடந்தது. கிருத்திகைக்கு வடபழனி ஆண்டவன் கோவிலுக்குச் சென்று விட்டுத் திரும்பி நடந்து வந்து கொண்டிருந்தாள் பட்டம்மா ரயில்வே ஸ்டேஷனுக்கு. அவளுடன் கமலு, ராஜி இருவருமே தளர் நடை நடந்து வந்து கொண்டிருந்தார்கள். 'சர்.... சரக்' என்கிற ஓசையுடன் வந்து நின்றது ஒரு பழைய மாடல் கார். உள்ளேயிருந்து ஒரு நடுத்தர வயதைக் கடந்த மாது பட்டம்மாவை நோக்கி அருகில் வரும்படி ஜாடை காட்டினாள்.

என்னமோ ஏதோ என்கிற கிலியுடன் காருக்கருகில் சென்றாள் பட்டம்மா. ''என்னங்க.....?'' என்றாள் கலவரத்துடன்.

''ஒரே மாதிரியாக இருக்கிறார்களே. இருவரும் இரட்டையாகப் பிறந்தவர்களா?'' என்று வினவினாள் கார்வாசி.

''ஆமாங்க!'' என்றாள் பட்டம்மா.

''பார்த்தால் ஏழை மாதிரி இருக்கு.''

''க்கும்!''

''இந்தப் பெண்களில் ஒன்றை எனக்குத் தருகிறாயா? எனக்குக் குழந்தை இல்லை.''

பட்டம்மா பேசவே இல்லை. வியப்பு அவள் வாயை அடைத்து விட்டது.

''சும்மா கொடுக்க வேண்டாம். ஐந்நூறு ரூபாய் தருகிறேன்.'' ஆசை காட்டினாள் காருக்குச் சொந்தக்காரி.

ஐந்நூறு ரூபாய்! எத்தனை ஜன்மம் எடுத்தாலும் பட்டம்மா ஐந்நூறு ரூபாயைக் கண்ணால் காண முடியுமா?

''இன்னும் ஒரு ஐம்பது வேண்டுமானால் சேர்த்துத் தருகிறேன். இப்பவே....'' என்று தனது கைப் பையைத் திறந்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து எண்ணிப் பட்டம்மாவின் முன்பு நீட்டினாள்.

பத்து மாதங்கள் சுமந்து பெற்றதா பாழ் போகிறது! கலை கலையாக ஐந்நூறு ரூபாய்க்கு மேல்! படபடக்கும் ரூபாய் நோட்டுக்களை ஆசையாகப் பார்த்தாள். பிணமே வாயைத் திறக்கக் கூடிய பணமல்லவா அவள் கண் முன்னே காட்சியளிக்கிறது!

''சரி, கொடுங்க.....'' என்று கையை நீட்டி அந்த ரூபாய் நோட்டுக்களை வாங்கிக் கொண்டாள் பட்டம்மா.

காரின் கதவு திறக்கப்பட்டது. முன்னால் நின்ற ராஜியை நகர்த்தி விட்டுப் பின்னால் நின்ற கமலுவைக் காருக்குள் தள்ளினாள் பட்டம்மா. கமலு துடுக்கானவள். ராஜி தான் பயந்து நடப்பவள். நொடியில் முடிவு செய்து விட்டாள் பட்டம்மா.

''நானும் ஏறிக்கிறேன்'' என்றாள் ராஜி.

''சீ! வா....பேசாமல்......'' என்று அதட்டி விட்டுக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனாள் பட்டம்மா. அவள் மடியில் கனம் இருக்கிறதே! சீக்கிரமாக வீட்டுக்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டாமா?

''ராஜி! ராஜி!'' என்று உரக்கக் கத்தினாள் கமலு. காருக்குள்ளேயிருந்து அவள் வாயை அழுத்திப் பொத்தினாள் விலைக்கு வாங்கிய அம்மா. அடுத்த நிமிஷம் கார் கிளம்பி விட்டது.

இதெல்லாம் பழைய கதை. நடந்து இரண்டு வருடங்களாகி விட்டன. இதற்குள் தான் எவ்வளவு மாறுதல்கள் நிகழ்ந்துவிட்டன! அன்றைய கமலு இன்றைய குட்டிக் கமலினியாகத் திரை வானில் புகழையும் பொருளையும் வாரிக் குவிக்கிறாள். அவள் நடிக்காத படமே இப்போது கிடையாது என்றே சொல்லலாம். பட்டம்மா இதற்காக வருந்தாத நேரமில்லை.

'எப்படியாவது கமலுவைச் சந்திக்க வேண்டும். அவளிடமிருந்து ஒரு நல்ல பட்டுப் பாவாடையும் சொக்காயும் கேட்டு வாங்கி அணிந்து கொள்ள வேண்டும் என்று ராஜிக்கு ரொம்பவும் ஆசையாக இருந்தது. ஆனால் அவள் எப்படிக் கமலுவைச் சந்திக்க முடியும்! அவள் வீடு இருக்கிற இடம் கூடத் தெரியாதே ராஜிக்கு! ஏன், பட்டம்மாவுக்குக் கூடத்தான் தெரியாது.

ஒரு பெண் ராஜியிடம் வந்து சொன்னாள். ''ஏ, ராஜி! நாளைக்குக் கஜேந்திரா டாக்கிஸில் 'பக்தனின் பக்தன்' நூறாவது நாள் கொண்டாடுகிறாங்களாம். அதிலே நடிக்கிறவங்களெல்லாம் மேடைக்கு வராங்களாம். குட்டிக் கமலினிகூட — அதானடி உங்க கமலு கூட மேடைக்கு வராளாம்''. என்று.

ராஜிக்கு உள்ளம் துள்ளியது. ஆனால் சினிமாவுக்குப் போக அவளிடம் காசேது? குறிப்பிட்ட நாளன்று கஜேந்திரா டாக்கிஸின் வாசலில் போய் நின்றாள் ராஜி. நடிக நடிகைகளைக் காண வந்திருந்த கூட்டத்தில் எப்படியோ முண்டியடித்துக் கொண்டு கேட்டுக்கருகில் வந்து நின்று கொண்டாள் ராஜி.

''டேய்! அதோ சுரேஷின் கார்டா !''

''இதோ இங்கே வாடா! குட்டிக் கமலினியின் கார் வருது. பாருடா......'' கூச்சல் காதைத் தொளைத்தெடுத்தது.

அந்த நீல நிறக் காரை ஆவலுடன் நோக்கினாள் ராஜி. அதில் ஜகஜ்ஜோதியாகக் கமலு அமர்ந்திருந்ததையும் கண்டாள். ''கமலு!'' பலம் கொண்ட மட்டும் உரக்கக் கத்தினாள். கமலு ராஜியைப் பார்த்திருக்க முடியாது. ஆனால் ராஜியின் குரலைக் கேட்டிருக்கலாம். இமைக்கும் நேரத்தில் கார் உள்ளே போய் விட்டது. ஒரே ஜரிகை மயமாக இருந்த கமலுவின் பாவாடை ராஜியின் கண்களை விட்டு அகலவேயில்லை.

கூட்டத்தில் யாரோ இருவர் பேசிக் கொள்வது அவள் காதில் விழுந்தது.

உங்கள் குழந்தைக்கு

# க்ரைமிக்ஸ் முறையாகக் கொடுத்து

ஆரோக்கியத்துடனும் மகிழ்ச்சியுடனும் இருக்க உதவுங்கள்.

க்ரைமிக்ஸ் உங்கள் குழந்தையின் தேவைகளை மனதிற் கொண்டு—அதன் மென்மையான வயிற்றுக்கு இதமளிக்க, வாயு, வயிற்றுப்பிடிப்பு, வயிற்றுக் கோளாறு முதலிய வற்றிலிருந்து துரித நிவாரணமளிக்க—பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டது. பல் முளைக்கும்போதும், தாய்ப்பால் மறக்கும்போதுங்கூட க்ரைமிக்ஸ் குழந்தை புன் சிரிப்புடனும், குதூகலத்துடனும் இருக்க உதவுகிறது.

ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்-உங்கள் குழந்தையின் சிறந்த ஆரோக்கியத்திற்கும், மகிழ்ச்சிக்கும் க்ரைமிக்ஸ் கொடுங்கள்

# க்ரைமிக்ஸ்

பூட்ஸ்  தயாரித்தது. லக்ஷக்கணக்கான தாய்மார்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

''இந்தக் கமலினி எங்கேடா இருக்கா?''

''சப்பு ரெட்டி தெருவிலே பத்தாம் நம்பர் வீடுடா. சின்னப் பங்களாதான். பக்கத்திலே கார்ப்பொரேஷன் ஸ்கூலுகூட இருக்கும்டா......''

''நாளைக்குப் போவலாமா!''

ராஜியின் பிஞ்சு உள்ளம் பேருவகையால் துள்ளிக் குதித்தது. 'ஏன் நாமும் இவர்களுடன் போகக் கூடாது. அத்தையிடம் பள்ளிக்கூடம் போவதாகச் சொல்லி விட்டுப் போய் விட்டு வந்தால் என்ன!' என்று எண்ணியதுடன் நில்லாமல் போய் வருவது என்றும் முடிவு செய்தான் துணிந்து. அதற்குப் பிறகுதான் அவனுக்கு அழுகையை அடக்கிக் கொள்ள முடிந்தது.

மணி பதினொன்றுக்கு மேலாகி விட்டது.

சப்புவும் முத்துவும் குட்டிக் கமலினியின் வீட்டு வாசலில் காத்திருந்து அலுத்துச் சலித்துப் போனார்கள். அவர்களுக்குக் கொஞ்சம் தள்ளினாற்போல் அவர்களுக்குத் தெரியாமல் தூங்குமூஞ்சி மரத்துக்கு மறைவில் நின்று கொண்டிருந்த ராஜிக்கு மட்டும் அலுப்போ, சலிப்போ கொஞ்சமும் ஏற்பட வில்லை. எப்படியிருந்தாலும் இன்றைக்குக் கமலுவைப் பார்த்துப் பேசி விட்டுத்தான் வீட்டுக்குப் போவது என்று பிடிவாதமாக நின்று கொண்டிருந்தான் அவன்.

இச்சமயத்தில் குட்டிக் கமலியின் வீட்டிலிருந்து அந்த நீல நிறக் கார் வெளியே சென்றது. அதனுள் கமலினி இல்லை. அவளுடைய வளர்ப்பு அம்மாதான் இருந்தாள்.

கமலியின் வீட்டு ஜன்னலையே பார்த்துக் கொண்டு கால் கடுக்க நின்று கொண்டிருந்தான் ராஜி. வெகு நேரத்துக்குப் பிறகு அந்த ஜன்னல் கதவுகள் திறக்கப்பட்டன. ஜன்னலின் விளிம்பில் ஏறி உட்கார்ந்துகொண்டிருந்தது கமலுவேதான். ராஜியின் நல்ல காலம். அந்த வீட்டுக்கு மதிற்சுவரோ, கூர்க்காவோ இருக்க வில்லை. அதற்கு இன்னும் கொஞ்ச காலம் போக வேண்டும் போலும்!

குடுகுடு வென்று ஜன்னலின் அருகில் ஓடினான். எல்லையற்ற குதூகலத்துடன், ''கமலு! கமலு!'' என்று அழைத்தான் ராஜி.

''ராஜி! ராஜி......'' வியப்பால் விழிகள் அகல உற்சாகத்துடன் கைகளைக் கம்பிக்கு வெளியே ஆவலுடன் நீட்டினாள் கமலு.

''கமலு! கதவைத் திறவேன். நான் உள்ளே வருகிறேன்'' என்றான் ராஜி.

''முடியாது, ராஜி! இந்த 'ரூமை' வெளியே பூட்டிக் கொண்டு போயிருக்காங்க அம்மா!'' என்றாள் கமலு, ஏக்கம் மிகுந்த குரலில்.

''உன்னை உள்ளே வச்சா?'' ஆச்சரியமாகக் கேட்டான் ராஜி.

''ஆமாம்! நான் இங்கே இருக்கப் பிடிக்காமல் ஓடிப் போய் விடுவேனோ என்கிற பயம் அவங்களுக்கு.''

''இந்த வீட்டிலே இருக்கப் பிடிக்காமல் கூட இருக்குமா என்ன?'' என்று ஏளனமாக வினவினான் ராஜி.

''ஏன் இருக்காது, ராஜி! எனக்கு இங்கே இருக்கக் கொஞ்சம்கூடப் பிடிக்க வில்லை. அத்தை வீட்டிலே இருக்கிற போது எவ்வளவோ சந்தோஷமா இருந்தேன்......''



டாக்டர்: என்னய்யா? அவர்களுக்கெல்லாம் ஆக்ஸிஜன் கொடுக்கச் சொன்னால் ஹைட்ரஜன் கொடுத்துத் தொலைத்து விட்டீர்களா?

இதைச் சொல்வதற்குள் கமலுவின் கண்களில் கண்ணீர் ததும்பலாயிற்று.

''நீ போய் பேசறே. கலர் கலராகப் பட்டுப் பாவாடை, பட்டுச் சட்டை, புதுசு, புதுசாக நகைகள். பிஸ்கட் – சாக்லேட், எங்கே போகவும் காரு. எவ்வளவு ஜோரா இருக்கே நீ...... வலிக்குதாக்கும்?''

''அம்மாடி...... இந்த மாதிரிப் பேச்சக் கேட்டு எவ்வளவு நாளாச்சு. இப்படி ஒரு பேச்சு உண்டா இங்கே? பட்டுப் பாவாடையாம், பட்டுப் பாவாடை. யாருக்கு வேணும்? அதுவும் எங்கேயாச்சும் ஸ்டுடியோ–விருந்து–ன்னு ஏதாவது நான் விழான்னு போகறப்போதான் பட்டுப் பாவாடை. மீதி நேரத்திலே இதோ, இது மாதிரி சீட்டிப் பாவாடைதான். சப்பு–சப்புன்னு பழமும் பிஸ்கட்டும் சாப்பிட்டுச் சாப்பிட்டுச் சலிச்சுப் போச்சு ராஜி! இடியாப்பமும் காரக் குழம்பும் சாப்பிட எவ்வளவு ஆசையாக இருக்கு தெரியுமா?''

''ஐயையே!'' வாயைப் பிளந்தான் ராஜி.

''தூக்கம் வருகிறப்போ தூங்கக் கூடாதாம். பசிக்கிறப்போ பிடிச்சதைச் சாப்பிடக் கூடாது. நிறைய ரூபாய் வருதாம். எனக்குப் பிடிச்சதை வாங்கிக்க முடியாது. உனக்கு ஒரு பட்டுப் பாவாடை கொடுக்க எனக்கு எவ்வளவு ஆசையாக இருக்கு தெரியுமா? எல்லாம் பீரோவுலே வைத்துப் பூட்டியிருக்காங்களே...'' பேசிக்கொண்டே வந்த கமலு திடீரென்று அழ ஆரம்பித்து விட்டாள்.

இச்சமயம் ஒரு கார் அந்தப் பங்களாவின் எதிரில் வந்து நிற்கவே, ''போய்விடு ராஜி!'' என்று சொல்லியபடி பரபரப்புடன் ஜன்னல் கதவை மூடிக் கொண்டாள் கமலு.

ராஜியும் மிகவும் பயந்து கொண்டு தான் நின்றுகொண்டிருந்த பழைய மரத்தடிக்கே விரைந்தோடினான். அங்கு போய் ஒரு மணி நேரம்போல் நின்று கொண்டிருந்தான். அப்படியும் கமலியின் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த கார் அவ்வீட்டை விட்டு

ஆறுவதாக இல்லை. ராஜிக்குக் கால்கள் வலிக்க ஆரம்பித்து விட்டன. பசிவேறு வயிற்றைப் புரட்டியது. வீட்டுக்குப் போய்விட எண்ணிச் சாலையில் வந்த பக்கம் திரும்பி நடந்தாள்.

சிறிது தூரம் வந்ததும் ஒரு முச்சந்தி வந்தது. மூன்று கிளைகளாகப் பிரிந்த சாலைகளில் எதன் வழியாகக் காலையில் வந்தோம் என்று தெரியாமல் விழித்துக் கொண்டு நின்றாள். பிறகு மனம் தோன்றிய வழியாக ஒரு சாலையில் நடந்தாள். நடந்துகொண்டே இருந்தாள். தலையைச் சுற்றியது. அப்படியே துவண்டு தரையில் சாய்ந்து விட்டாள்.

வேகமாக வந்து கொண்டிருந்த ஒரு கார் சடக்கென்று 'பிரேக்' போட்டு அவளருகில் வந்து நின்றது.

**ரா**ஜி மெள்ளக் கண் விழித்தபோது, யாரோ பரிவு மிகுந்த குரலில், "இந்தாம்மா! இந்தக் காப்பியைச் சாப்பிடு" என்று கூறியதைக் கேட்க வியப்புடன் சுற்றும் முற்றும் பார்த்தாள். அது — அவள் இருந்த இடம் அவளுக்கு முற்றிலும் புதியது.

பசி வயிற்றைப் பிடுங்கி எடுத்ததால் காப்பியை வாங்கி 'மடக் மடக்' என்று ஒரு மூச்சில் குடித்து முடித்தாள் ராஜி.

"இந்தப் பெண்ணைப் பார்த்தால்.... கமலினி மாதிரியே இல்லே?"

"ஆமாம், டைரக்டர்! இந்தப் பெண்ணையே வைத்துக் கொண்டு இன்றைய கால்ஷீட்டை முடித்துவிட்டால் என்ன?"

"நானும் அதைத்தான் நினைத்தேன். கல்லுக்குண்டாக இருக்கும் கமலினிக்கு உடம்பு சரியில்லே, 'ஷூட்டிங்'குக்கு வர முடியாது என்று அதன் அம்மா சொன்னதைக் கேட்டபோது எனக்கு ஆத்திரமாக வந்தது சார்."

டைரக்டரும் தயாரிப்பாளரும் ஒரு முடிவுக்கு வந்த பின் டைரக்டர், "ஏம்மா, உன் பெயர் என்ன?" என்று வினவினார் ராஜியிடம்.

"ராஜி!" என்றாள் அவள்.

"நீ இன்று மட்டும் சினிமாவிலே நடிக்கிறாயா?"

ராஜிக்குச் சந்தோஷத்தைவிட ஆச்சரியமே அதிகமாக இருந்தது. சினிமாவில் நடித்தால் கமலு மாதிரி பட்டுப் பாவாடை உடுத்திக் கொள்ளலாமே, நெக்லஸ், வளையல்கள் பளபளவென்று அணிந்து கொள்ளலாமே என்று உள்ளம் கற்பனை வானில் துள்ளிப் பறந்தது. "ஓ!" என்றாள் உற்சாகமாக.

அரை மணி நேரம்தான். மேக்கப் முடிந்து விட்டது. டைரக்டர் பார்த்துத் திருப்தி தெரிவித்தார். ஷூட்டிங் ஆரம்பமாகி விட்டது. பிரமீளாதேவிகூட வந்துவிட்டாள்.

"சரி, இப்படி இங்கே வாம்மா..." என்றார் டைரக்டர்.

பூதாகாரமான விளக்குகளின் எதிரில் கொண்டு வந்து நிறுத்தியதுமே ராஜியின் உடம்பு குப்பென்று வியர்த்துக் கொட்டியது. அதீதமான ஒளி கண்களில் எரிச்சலை உண்டாக்கியது. இனந் தெரியாத பீதியால் உடம்பு நடுங்கியது. அழுதுவிடுவாள்போல் இருந்தது.

"பயப்படாதே ராஜி!" என்றார் டைரக்டர்.

"என்னை என்ன செய்யப் போறீங்க?" என்று எப்படியோ துணிந்து கேட்டுவிட்டாள் சிறுமி ராஜி.

"சினிமாவில் நடிக்கிறேன் என்று சொன்னாயே!" என்றார் டைரக்டர்.

"இந்தக் கிழிசல் பாவாடை, கிழிசல் சொக்காயுடனா? பட்டுப் பாவாடை, நெக்லஸ்...." ராஜி இப்படிக் கேட்டதும், அங்கே குழுமியிருந்த சிறு கூட்டம் முழுதும் 'கொல்'லென்று நகைத்தது.

"பட்டுப் பாவாடை, சொக்காய் எல்லாம் இந்தப் படத்துக்குத் தேவையில்லே ராஜி. இந்தப் படத்திலே கமலினிக்குப் பிச்சைக்காரப் பெண் வேடம். இப்படியேதான் படம் முழுதும் நடிக்க வேண்டும்..." என்று விளக்கினார் டைரக்டர்.

"அப்படின்னா நான் நடிக்கலே. என்னை வீட்டுக்கு அனுப்பிடுங்க..." என்று கூறிய ராஜி அளவு கடந்த ஏமாற்றத்தினால் 'ஓ!'வென்று அழுதாள்.

"இதேதுடா பெரிய வம்பாய்ப் போச்சு! அடித்து விரட்டுடா!" என்று கத்தினார் தயாரிப்பாளர்.

அடுத்த ஐந்தாவது நிமிடம் ராஜியை ஏற்றிக்கொண்டு கார் பறந்தது. கார் டிரைவருக்குக் கொஞ்சம் இளகிய மனசுபோலும்! "ஏன் பாப்பா! உன் வீடு எங்கே இருக்கிறது!" என்று விசாரித்தார் ராஜியிடம்.

நல்ல காலம். ராஜிக்கு வீட்டு நம்பர் தெரியாவிட்டாலும், தெருவின் பெயர் தெரிந்திருந்தது; சொன்னாள். அந்தத் தெருவின் முகப்பில் அவளை இறக்கி விட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தார். இதற்குப் பிறகு அவளுக்குத் தன் வீட்டைக் கண்டுபிடிப்பது சிரமமாக இருக்கவில்லை. நேரத்தில் தன் வீடு போய்ச் சேர்ந்தாள்.

"காலமேப்பிடிச்சு எங்கேடி போயிட்டே! எங்கே ஊரு சுத்திட்டு வரறே?" என்று உரக்கக் குரல் எடுத்து அதட்டினாள் அத்தை.

வழக்கம்போல் திருதிருவென்று விழித்துக் கொண்டு சிறிது நேரம் நின்றாள் ராஜி.

"அழுத்தக்காரியாச்சே நீ! மொடாவை எடுத்துக்கிட்டுப் போய்க் குழாய்த் தண்ணி புடிச்சுக்கிட்டு வா. குடிக்கப் பொட்டுத் தண்ணி இல்லே..." என்று உத்தரவிட்டாள் ராஜியின் அத்தை.

மொடாவை எடுத்துக் கொண்டு குழாயடியை நோக்கிச் சென்றாள் ராஜி மௌனமாக. தெருவில் நேற்று அவள் பார்த்த சினிமா விளம்பர வண்டி இன்னும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றி வழக்கம் போல் சிறுவர் — சிறுமியர் கூட்டம் கூச்சல். ராஜியும் அவளை இடித்துக் கொண்டு போய்ப் படங்களைப் பார்த்தாள். ஆனால் இப்போது அவளுக்குக் குட்டிக் கமலினியின் படத்தைப் பார்த்ததும், ஏக்கமும் ஆசையும் ஏற்படவில்லை. 'பாவம், கமலு!' என்கிற அனுதாபம்தான் உண்டாயிற்று. கண்களிலிருந்து ஒரு பொட்டுக் கண்ணீர் தெறித்து விழுந்தது. அதுதான் உடன்பிறந்த பாசத்தின் அடையாளமோ! நிம்மதியான மனத்துடன் குழாயை நோக்கி நடந்தாள் ராஜி.

பிச்சமணியைப் பற்றி லலிதா ஏராளமாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டு, அவனுடைய தாத்தாவிடமே அவளும், "தாத்தா! தாத்தா!" என்று வாயாரக் கூப்பிட்டு, உறவு முறை கொண்டாடித் தந்திரமாக என்னென்ன வெல்லாமோ விசாரிக்கிறாள். இதை யெல்லாம் யோசிக்கும் போது, அவளுக்குப் பிச்சமணியின் மீது உள்ளூறக் காதல் ஏற்பட்டிருக்குமென்றே தோன்றுகிறது. ஆனால் அந்த மடையனுக்கும் அவள் மீது காதல் ஏற்படவேண்டுமே! இதையெல்லாம் அவனிடமே நேரில் சொன்னால், லலிதாவை அவன் தலையில் கட்டிவிடப் பெரியவர்கள் சதி செய்வதாக நினைத்துக்கொண்டு முடியாதென முரட்டுத்தனமாகப் பிடிவாதம் பிடித்து ஒரேயடியாக எகிறிக் குதித்து விடுவான்! அதைவிட லலிதாவோடு அவன், வாய்ச் சண்டை இழுத்து அதன்மூலமாவது ஒரு சுவாரசியம் பிறந்து அவர்களிடையே நெருங்கிய பழக்கம் ஏற்பட்டு அது காதலாக வளரட்டும்! லலிதாவும் சாதுரியமாகப் பிச்சமணியின் மனத்தை எப்படியும் கவர்ந்து விடுவாள்! இளம் சிட்டுகள் தனிமையில் சஞ்சரித்துத் தனித்துப் பேசும் போது அவர்களுடைய உள்ளங்கள்ஒட்டி உறவாடவே செய்யும்!

இவ்வாறெல்லாம் எண்ணமிட்ட மேஜர் ராமதுரை தம் பேரனை நோக்கி "டேய், பிச்சமணி! சட்டைக் காலரைத் தூக்கி விட்டுக் கொண்டு நிமிர்ந்து போடா!" என்று ஒரு வீரனைப் போர்க் களத்துக்கு வழியனுப்புவது போல் அவனை வழியனுப்பி வைத்தார்.

தாத்தாவின் சுபாவத்தில் ஏற்பட்டிருக்கும் மாறுதலையும், அவரது நடவடிக்கைகளின் புதிய போக்குகளையும் சிந்திக்கச் சிந்திக்கப் பிச்சமணிக்கு வியப்பு மேலிட்டது! ஓரளவு அவனுக்கு விஷயமும் புரிந்து விட்டது. "இருக்கட்டும், இருக்கட்டும்' என்று அவன் தன் மனத்தில் கறுவிக் கொண்டே ஓட்டலின் மேல் தளத்துக்கு வந்தான். அங்கே ஓர் அறையில்தான் லலிதாவும் அவளுடைய அப்பாவும் தங்கியிருந்தார்கள்.

லலிதா வெள்ளை நிறப் பட்டுப் பாவாடையும் ரவிக்கை தாவணியும் அணிந்து கொண்டு, தலை வாரி இரட்டைப் பின்ன விட்டு அவற்றினிடையே ஒரு புறமாக முல்லைப் பூச்சரத்தைத் தொங்க விட்டுக் கொண்டு பிச்சமணிக்காகத் தயாராகக் காத்திருந்தாள். அவனுக்காகவே



# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

அவள் தன் ஆடையலங்காரங்களின் சிறு சிறு விஷயங்களில்கூட அதிகக் கவனமும் அதிக நேரமும் செலவழித்திருந்தாள்.

அவளுக்குப் பத்தொன்பது வயது தான் இருக்கும். ஆனால் அவளுடைய முகத்தின் பளபளப்பையும், பருவத்தின் மெருகையும், கண்களின் ஜொலிப்பையும் பார்க்கும் போது இன்னும் இரண்டொரு வயது குறைவாகவே மதிப்பிடத் தோன்றும். அவள் படிப்பில் மிகவும் கெட்டிக்காரி! விடுவிடுவென்று மேல் வகுப்புக்களுக்குத் தாவி பி. ஏ. பரீட்சையில் முதல் மார்க்கு வாங்கும் முதல்தர மாணவியாகவும் விளங்கினாள். ஆனால் அதன் கர்வம் எதுவும் அவளிடம் கிடையாது. படிப்பின் பண்பாடு ஒளி வீசும் அவளுடைய முகத்திலும், நடையுடை பாவனைகளிலும் ஒருவித அமைதியும் அடக்கமுமே உறவாடிக் கொண்டிருக்கும். அவள் சாதுரியமாகவும், சகஜமாகவும் அர்த்த புஷ்டியோடும் சிரித்துப் பேசக் கூடியவள்தானென்றாலும் குழந்தை போலவே கள்ளங் கபடமற்ற உள்ளம் படைத்தவளாயிருந்தாள்.

அவள் காப்டன் மருத நாயகத்துக்கு ஒரே பெண்! அவள் பிறந்ததுமே தாயை இழந்து விட்டதால் தந்தையே தாயாகவும் இருந்து பரிவு காட்டி அவளை மிகவும் செல்லமாக வளர்த்தார். அவளுடைய நன்மையை உத்தேசித்தே அவர் மறுமணமும் செய்து கொள்ளவில்லை. அவர் சுபாவத்தில் மகா முன்கோபி என்றாலும் லலிதா குறுக்கிட்டு ஏதாவது சொன்னால் உடனே சிரித்து விடுவார். லலிதாவின் 'இஷ்டத்துக்கு விரோதமாக எதையும் செய்யவோ எண்ணவோ மாட்டார். ஏனெனில், அவருக்கு இந்த உலகத்தில் உள்ள பிடிப்பெல்லாம் மகள் ஒருத்திதான்! அவருடைய கனவெல்லாம் அந்த மகளின் எதிர்காலத்திய ஆனந்த வாழ்வு ஒன்றுதான்!

''நான் வந்துவிட்டேன்!'' என்று கட்டியங் கூறிக்கொண்டே



பிச்சுமணி அவர்களுடைய அறை வாசல் முன் வந்து முகத்தைத் திருப்பிக் கொண்டு நின்றான்.

''அப்பா! நம் ரிஷ்யசிருங்கர் வந்து விட்டாரப்பா!'' என்று லலிதா ஒரு சிரிப்புடன் குதித்துக் கொண்டே எழுந்தாள். அப்போது அவளுடைய அப்பா பாத்ரூமில் வெந்நீர் தொட்டியில் நீர்த்தமாடிக் கொண்டிருந்ததால் — ரிஷ்யசிருங்கரை ஆசார உபசாரங்களுடன் வரவேற்க அவரால் முடியவில்லை. லலிதா மட்டுமே பிச்சுமணியின் முன் வந்து 'ஜில்'லென்று நின்றாள்.

தனக்கு ரிஷ்யசிருங்கர் என்று ஒரு புனைப் பெயரை அந்தக் காலேஜ்குறும்பி சூட்டி விட்டாளே யென்று பிச்சுமணிக்குக் கோபம் கோபமாக வந்ததால், அவன் தன் முகத்தை உம்மென்று வைத்துக் கொண்டான். ஆனால் அந்தப் புனைப் பெயரின் உள்ளர்த்தம் அவனுக்குத் தெரியாதாகையால் அதன் விளக்கத்தை அவளிடமே கேட்க வேண்டுமென்றும் துடி துடித்தான்.

''கொஞ்சம் பிஸ்கட் சாப்பிடுகிறீர்களா?'' என்று உபசாரமாகக் கேட்டாள் லலிதா.

''எனக்குப் பிஸ்கட்டும் வேண்டாம்; சாக்லேட் மிட்டாயும் வேண்டாம்! நாம் கடற்கரைக்குப் போகலாம். உன் அப்பா எங்கே?''

''அப்பா வரவில்லையாம்!''

''ஏன், என் தாத்தாவைப் போல் அவராலும் அதிக தூரம் நடக்க முடியாதா?'' என்றான் பிச்சுமணி ஒரு மாதிரியாக.

லலிதா சிரித்துக் கொண்டாள். பிறகு அவள் மெல்லத் தன் ஓர விழிகளால் பிச்சுமணியை ஒரு முறை ரசனையோடு பார்த்து விட்டு ஒரு புன்முறுவலுடன், ''புறப்படலாம்!'' என்றாள்.

''தனியாகவா?''

''ஆமாம். உங்களுக்குப் பயமாக இருக்கிறதா?''

''எனக்கென்ன பயம்? நீதான் போலீஸ்காரி மாதிரி எனக்குக் காவலாக வரப் போகிறாயே?'' என்றான் பிச்சுமணி கடுகடுப்புடன்.

லலிதா 'களுக்'கென்று சிரித்தாள்.

''நீ முன்னால் போ! உன் பின்னாலே நான் வருகிறேன்! அப்படித்தான் என் தாத்தா சொல்லி யிருக்கிறார்!'' என்றான் பிச்சுமணி.

''இல்லை, நாம் இருவரும் ஒன்றாகவே போவோம்!''

''ஏன், நான் ஓடிப் போய் விடுவேன் என்று நினைக்கிறாயா?''

''இல்லை; என்னைத் தனியாக விட்டு விட்டு நீங்கள் எங்கும் போய்விட மாட்டீர்கள்!'' என்று லலிதா உறுதியும் பாசமும் ததும்பும் குரலில் சொல்லி விட்டுத் தன் விழிகளால் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவ்விழிகளின் ஆழ்ந்த பார்வைக்கும், அவள் சொன்ன அர்த்த புஷ்டியான வார்த்தைக்கும் பதில் சொல்ல முடியாமல் பிச்சுமணி தலை குனிந்து கொண்டான். அவனை நம்பித் தன்னையே ஒப்படைத்துவிட லலிதா தயாராக இருக்கிறாள் என்பதை அவளுடைய அந்த ஒரு வார்த்தையே உணர்த்திவிட முயல்வது போலிருந்தது.

இருவரும் ஒன்றாகவே கடற்கரையை நோக்கி நடந்தார்கள். அவர்களை ஒன்றாகப் பார்ப்பவர்கள் மிகவும்பொருத்தமான ஜோடி என்றே மனம் பூரிப்பார்கள். ஏனெனில், பிச்சுமணி இளமையின் புதுக் குருத்துப் போலவும் ஒரு விதப் பெண்மையின் சாயலோடும் எவ்வளவு அழகாக இருந்தானோ, அந்த அழகுக்கெல்லாம் அழகு செய்வது போலவே அவனருகில் லலிதாவும் அலாதிப் பொலிவுடன் விளங்கினாள்.

''என்னை ரிஷ்யசிருங்கர் என்றாயே, ரிஷ்யசிருங்கர் யார்?'' என்று கேட்டான் பிச்சுமணி மெல்ல.

''அவர் ஒரு ரிஷி! தாடி மீசையில்லாத அழகான இளம் ரிஷி!''

''ரிஷிக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?''

''ரிஷ்யசிருங்கர் நிர்மானுஷ்யமான காட்டில் பெண் வாடையே தெரியாதபடி வளர்ந்தாராம். அதனால் பெண்களைப் பார்த்தாலும் வன மிருகங்கள் என்றுதான் நினைத்துக் கொள்வாராம்! அது வேடிக்கையாக இல்லையா? ஆனால் உங்களையும் அது போலத்தான் வளர்க்க உங்கள் தாத்தா அரும் பாடுபட்டிருக்கிறார்!'' என்றாள் லலிதா.

''அது எப்படி உனக்குத் தெரியும்?''

''பாதி என் அப்பா சொன்னார், பாதி உங்கள் தாத்தாவே சொன்னார்!''

''என்னைப் பற்றி என் தாத்தா இன்னும் என்னவெல்லாம் சொன்னார்?'' என்று பிச்சுமணி வெகு ஆவலோடு கேட்டான்.

''நீங்கள் தொட்டிலில் ஆடும் குழந்தையாய் இருக்கும்போதே மிகவும் பிடிவாதம் பிடிப்பீர்களாம்.''

''அப்புறம்?''

''இப்போது கூட உங்களைக் கட்டுப்படுத்துவது ரொம்பக் கஷ்டமாம்!'' என்று சொன்ன லலிதா அவனுடைய

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்
—ரண சிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா? தாங்க முடியாத அரிப்பா? எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா? ரத்தக் கசிவா? உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.

BJ-DOL-2 A TM

# தோல்நல
# பாதுகாப்பிற்கு

# விக்கோ
# அற்கஜா




குளிப்பதற்கு 15 நிமிடங்களுக்கு முன் தேகத்தில் தேய்ப்பதற்கான ஓர் ஆயுர்வேத எண்ணெய். இதைத் தவறாது உபயோகித்தால் அது உங்கள் கவர்ச்சியை மிகைப்படுத்தி, உங்களைத் தோல் வியாதிகளிலிருந்து பாதுகாக்கிறது.



Vicco
LABORATORIES
BOMBAY 14

VTAMIL

**விக்கோ லாபரடரீஸ், பம்பாய் 14**

ஸ்டாக்கிஸ்டுகள்:

சென்னை: ஆர். எஸ். கவுடர் & கோ.
59, பந்தர் தெரு — சென்னை-1

கோயமுத்தூர்: N. தேவராஜ் கவுண்டர்&கோ.
அவிநாசி ரோடு - கோயமுத்தூர்

பெங்களூர்: கே. எஸ். கவுடர் & கோ.
கபேதார் சத்திரம் தெரு, பெங்களூர்

பகைமையான முகத்தை ஒரு தடவை உற்றுப் பார்த்துவிட்டு, "ஆனால் எனக்கு அப்படித் தோன்றவில்லையே!" என்று மெல்லச் சொல்லிவிட்டுச் சிரித்தான்.

"ஓஹோ!" என்று பிச்சுமணி முனகினான்.

இருவரும் கடற்கரையோரமாக நடந்து செல்லும்போது ஓரிடத்தில் சட்டென்று பிச்சுமணி நின்றான். அந்த இடத்தில் முப்பெருங் கடல்களின் மூன்று புறங்களிலிருந்தும் பேரலைகள் பொங்கிப் புரண்டு அங்கு ஒன்று கூடுவதற்காகத் தாவி வர முயல்வது போல் தோன்றியது.

அந்த இடத்தில் கடலில் நீந்தி விளையாட வேண்டுமெனப் பிச்சுமணிக்கு ஆசை பிறந்து விட்டது. உடனே அவன் தன் மேல் சட்டையைக் கழற்றி மணலில் போட்டான்.

அதைக் கண்டதும் லலிதா திடுக்கிட்டாள். "நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? இங்கே கடலில் நீங்கள் இறங்கவே கூடாது!" என்று அவள் பதறினாள்.

"ஏன் எனக்கு நீந்தத் தெரியாது என்று நினைத்தாயா? திருச்செந்தூர் கடலிலேயே நான் நிறைய நீந்தி விளையாடியிருக்கிறேன்!"

"திருச்செந்தூர்க் கடல் சாந்தமான கடல்! அங்கே கடலில் ஓர் எலுமிச்சம் பழத்தைப் போட்டாலும் அதை மறுபடியும் கரைக்கே கொண்டு வந்து சேர்த்துவிடும். ஆனால் இங்கே கன்னியாகுமரியில் உள்ள கடல்கள் அப்படியல்ல. மிகவும் ருத்திராம்சம் உள்ளவை! எதையும் உள்ளே சுருட்டி இழுத்துக் கொண்டு போய் வெகு ஆழத்தில் புதைத்துவிடும்! கடலின் புதை மண்ணில் கால் இழுபட்டுப் பலர் முடமாகியும் இருக்கிறார்கள். இங்கே ஸ்நானக் கட்டத்தைத் தவிர வேறு எந்த இடத்திலும் குளிக்கவே கூடாது!"

"அதற்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன்! என்னைக் கடலிலேயே கால் வைக்க விடமாட்டேன் என்று என் தாத்தாவிடம் நீ வாக்குறுதி கொடுத்தாயாமே?"

"ஆமாம்!"

"நான் இந்த இடத்தில் குளித்து விட்டுத்தான் வருவேன்! உன்னால் என்ன செய்ய முடியும்? குஸ்திச் சண்டை போட்டு என்னைத் தடுத்து நிறுத்துவாயா?"

"அதுக்கு உங்களைப் போல் எனக்குப் பலமில்லையே!"

## குட்டிக் கதை

நம் நாட்டிலுள்ளது போல் அமெரிக்காவிலும் வீடு வீடாகச் சென்று பொருள்களை விற்றுவரும் வியாபாரிகள் உண்டு. ஒரு சமயம் ஏதேதோ சாமான்களை விற்பனைக்கு எடுத்துச் சென்ற ஒரு வியாபாரி ஒரு வீட்டின் கதவைத் தட்டினார். ஒரு வயதான அம்மாள் கதவைத் திறந்தாள். அவள் பார்வை ஒரு மேக்கப் செட் மேல் சென்றது. அதை எடுத்து 'என்ன விலை?' என்றாள். உடனே வியாபாரி 'அது உங்களுக்கு வேண்டாம். அம்மா... அதெல்லாம் இளமை போனவர்களுக்காக விற்கிறேன்.... உங்களுக்கு மேக்கப் சாதனங்கள் இன்னும் பல வருடங்களுக்குத் தேவைப்படாது' என்றார். அந்த அம்மாளின் மனம் குளிர்ந்து விட்டது. அதிக



விலையில் பல பொருள்களை அவள் தலையில் கட்டிவிட்டுக் கிளம்பினார் வியாபாரி.

தம் தந்திரம் பலித்ததில் மிகவும் சந்தோஷம் அடைந்த அவர் அடுத்த வீட்டை அடைந்தார். கதவு திறக்கப்பட்டு ஒரு படுகிழவி தடி ஊன்றிக் கொண்டு வெளியே வந்தாள். சாதாரணமாக ஒரு வியாபாரி என்ன கேட்டிருப்பான்? 'உங்கள் பெண் இல்லையா' என்றுதானே? அதை இந்த வியாபாரி கேட்கவில்லை. அவளைச் சந்தோஷப் படுத்துவதற்காக 'ஹலோ! யங் லேடி! உன் அம்மா இருக்கிறாளா?' என்றார். உடனே அவள் 'ஓ! இருக்கிறாளே!' என்று உள் பக்கம் திரும்பிப் பார்த்து "அம்மா! இங்கே வா!" என்று அழைத்தாள்.

அவ்வளவுதான்; வியாபாரி திரும்பிப் பாராமல் எடுத்தார் ஓட்டம்!

"பின்னே என்ன செய்வாய்? கரையிலேயே உட்கார்ந்துகொண்டு ஓவென்று அழுது ஆட்களைக் கூட்டுவாயா?"

"அதற்குள் அலைகள் உங்களை இழுத்துக்கொண்டு போய் விடுமே?"

"போகட்டும்!"

"அப்படியானால் அந்த அலைகள் என்னையும் இழுத்துக் கொண்டுபோகட்-



''யாரப்பா அது?''
''நான்தாங்க?''
''ஏனு?''
''நான் ஏழையுங்க. அம்மா என் பசிக்கு இரங்கி அடை கொடுத்தாங்க. புஷ்பமா இருந்துதுங்க! அதுமாதிரி ஏதேனும் இன்னிக்கும் கேட்கலாம் என்று வந்தேன்.''
''என்ன! அடை பூப்போல இருந்ததா?''
''ஆமாங்க!''
''அப்ப அது பக்கத்து வீடாக இருக்கும். அங்கு போய்க் கேளு!''

டும் என்று உங்களோடு கடலில் குதித்து விடுவேன்! எனக்கு நீந்தத் தெரியாதே என்று கூடப் பார்க்க மாட்டேன்!'' என்று லலிதா கண்களில் நீர் துளிர்க்கச் சொன்னாள். அந்தக் கண்ணீரும் அவள் சொன்ன வார்த்தைகளும் பிச்சுமணி இல்லாவிட்டால் தனக்கு வாழ்க்கையே இல்லை என்பதை உணர்த்துவது போல் இருந்தன.

அவள் என்னதான் செய்கிறாளென்று பார்ப்போம் என்று பிச்சுமணி நினைத்தவனாய்க் கடல் நீரை நோக்கிக் காலடி எடுத்து வைத்தான். அதற்குள் லலிதா அவனுக்கு முன்னாலேயே கடலில் விழத் தயாரானவள் போல் விடுவிடுவென்று நடந்தாள்.

அவளுக்கு நீந்தத் தெரியாது என்று அவள் சொன்னது பிச்சுமணியின் நெஞ்சில் சுரீரென்று முள் போல் குத்தவே, அவன், ''நில், லலிதா!'' என்று கூவியபடி தாவியோடி அவளைப் பிடித்திழுத்து நிறுத்தி அவளுடைய மெல்லிய தோள்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அந்தப் பிடியின் ஸ்பரிசத்தால் லலிதா மெய் மறந்து ஒரு கணம் ஆனந்த மூர்ச்சையுற்றவளாகி விட்டாள். தன் மேனி முழுவதும் ஓர் அனல். வேகம் பாய இன்ப வெள்ளத்தில் மிதந்தாள். பிறகு அவள் அந்தப் பிடியிலிருந்து விலக மனமில்லாதவளாகவே மெல்லப் பிச்சுமணியின் முகத்தை மிக அருகில் ஏறிட்டுப் பார்த்துத் தன் கண்ணீர் நிறைந்த விழிகளாலேயே மெல்லச் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் எத்தனையோ அர்த்தங்கள் தொனித்தன!

பிச்சுமணி சட்டென்று தன் பிடியைத் தளர்த்தி விட்டான். அவனுடைய கைகளிரண்டும் உதறலெடுத்தன.

லலிதா நாணத்தோடு தலை குனிந்தாள். அவள் உடலெங்கும் வியாபித்திருந்த ஆனந்தத்தின் அனல் தகிப்பு இன்னும் அடங்கவில்லை.

அதன் பிறகு பிச்சுமணி வேறு வழியின்றிக் கடற்கரையின் மீது தன் சட்டையைத் தேடலானான். அந்தச் சட்டையைக் கடலோரக் காற்று குறும்புத்தனமாகக் கடலின் அலைக் கரங்களில் தள்ளி விடவே, அலைக் கரங்கள் பேராசைக்காரியின் மதமதவென்ற கைகளாக மாறி அந்தச் சுருட்டி இழுத்துக் கொண்டு போய் அதன் சுவடே தெரியாதபடி எங்கோ ஆழத்தில் புதைத்துக் கொண்டுவிட்டது. அப்போதுதான் கடல் அலைகளின் பயங்கரம் பிச்சுமணிக்குப் புரிந்தது.

அவன் நன்றிப் பெருக்கோடு லலிதாவை ஏறிட்டுப் பார்த்தான். அந்தப் பார்வையைக் காதலின் கனிவு என்று கருதிக்கொண்ட லலிதா தன் புத்திளம் உதடுகளில் நாணப்புன்முறுவல் கொஞ்சி விளையாட அதன் சுகத்திலேயே ஒன்றிப் போய் ஒரு கணம் அசைவற்று நின்றாள். பிறகு மினுமினுக்கும் தன் ஓர விழிகளைச் சிறிது உயர்த்தி, முண்டாப் பனியனோடு நிற்கும் பிச்சுமணியின் விசாலமான தோள்களையும், மெழுகு போல் மொழு மொழு வென்றிருக்கும் அவனுடைய உடம்பின் செழுமையான நிறத்தையும் ஆவலோடு உற்றுப் பார்த்து ஒரு பெருமூச்சு விட்டாள். அந்தப் பெருமூச்சின் சுகத்திலும், அதையொட்டிய இருதயத்தின் தாபங்களிலும் லயித்தவளாய் ஒரு கணம் நெஞ்சு விம்ம நின்றாள்.

பிச்சுமணி தன் முகத்தை வேறு புறம் திருப்பிக் கொண்டு, ''நாம் சூரியாஸ்தமனம் பார்க்கப்போகலாமா?'' என்று மெல்ல முனகினான்.

''இப்போது மணி நாலரைதானே ஆகிறது!'' என்று கூறிய லலிதா மெல்லச் சிரித்தாள். (தொடரும்)

# டெக்ஸ்ட் புக் பாட்டி!

அனுசூயா

**ஔ**வைப் பாட்டி எப்படி இருப்பாள்? அவள் உயிருடனிருந்தபோது அவளைப் பார்த்து யாரும் படம் எழுதவில்லை. அவளைப் பற்றி எத்தனையோ சுக்கடாக் கதைகள் உண்டு. ஆனால் அவற்றிலிருந்து அவள் ஒல்லியாயிருப்பாளா, பருமனாக இருப்பாளா உயரமா, குள்ளமா, கறுப்பா, சிவப்பா ஒன்றும் தெரியாது. அவளைப் பற்றி யாரும் வர்ணித்திருக்கவில்லை.

ஒரு நாடகத்தில் யாராவது ஔவையார் வேஷம் போட்டு நடித்தால் அவள் அந்த மாதிரிதான் இருப்பாளாக்கும் என்று தீர்மானித்துக் கொள்கிறோம். சினிமாப் படத்தில் இன்னொருவர் அந்த வேஷம் போட்டுக் கொண்டால் அந்த மாதிரி இருப்பாளாக்கும் என்று தீர்மானித்துக் கொள்கிறோம். அவள் கடு கடு, சிடு சிடுவென்று முகத்தை வைத்துக் கொண்டு குடுகுடுவென்று நடந்து செல்பவள் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறோம். ஔவையார் படத்தைப் போட்டு யாரும் காலண்டர்கள் அச்சடிப்பதில்லை, ஏனென்றால், அவள் ஒரு பாட்டிதானே? பெண் அல்லவோ? நடுத்தர வயதான ஸ்திரீகூட அல்லவே!



இப்போதெல்லாம் கிழவி குமரியாக ஆசைப்படுகிறாள். அவளைக் குமரியாகக் காண்பிக்கச் செய்ய மருந்துகள், ஒப்பனைச் சாமான்கள் எல்லாம் இருக்கின்றன. ஆனால் அந்த ஔவை குமரியாக இருந்தபோது கிழவியாகி விடுவதற்கு ஆசைப்பட்டாளாம். கடவுள் 'அப்படியே ஆகுக!' என்றாராம். அடுத்த கணத்தில் அவள் ஒரு பாட்டியாகி விட்டாள் என்று கதை.

தமிழ் நாட்டில் எத்தனையோ பெண் கவிஞர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எல்லோரும் பக்தைகள் என்ற முறையில் தான் பாடியிருக்கிறார்கள். ஔவையார் ஒருவர்தான் உலக விஷயங்களைப் பற்றிப் பாடல்கள் எழுதியிருக்கிறார். பெண் கவிஞர்களுள் தலைசிறந்தவள் அவள்தான்.

ஔவையாரைக் குழந்தைகள் கவிஞர் என்று சொல்லலாம். அதை விடப் பாடப் புத்தகக் கவிஞர் என்று சொல்வது அதிகம் பொருந்தும். ஏனென்றால் புத்தகத்தின் கடைசியில் 'அறஞ்செய விரும்பு' வகையறாப் பாடல்கள் இல்லாத சிறுவர் பாடப் புத்தகங்களே இல்லை; இருக்க முடியாது.

திருவள்ளுவர் பெரிய பெரிய விஷயங்களை இரண்டே வரியில் அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஆனால், ஔவையாரோ அதே விஷயத்தை ஒரே ஒரு வரியில் இன்னும் அதிக அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

மனிதனுக்குக் கல்வி அத்தியாவசியம் என்பதை எடுத்துச் சொல்ல ''எண்ணென்ப, ஏனை எழுத்தென்ப....'' என்று ஆரம்பிக்கும் இரண்டு வரிகள் உள்ள ஒரு குறள் வேண்டியிருந்தது. ஔவையாரோ, ''எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்'' என்று ஒரே வாக்கியத்தில் அடித்துத் தள்ளிவிட்டார். வள்ளுவர் மணம் செய்துகொண்டு உயர்ந்த முறையில் கிருகஸ்தாசிரமம் நடத்தியவர். ஔவை கன்னிகைப் பாட்டி; பிரம்மசாரிணி. ஸ்திரீயான அவளையும் சமமாகக் கௌரவிக்க வேண்டும், ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஔவைப் பாட்டியின் ஞாபகார்த்தமாக ஒரு தபால் ஸ்டாம்பு போடலாம். இப்போது சென்னை சட்டசபையில் திருவள்ளுவரின் உருவப் படம் ஒன்று மாட்டியிருக்கிறார்கள். அதே மாதிரி ஔவைப் பாட்டியின் படம் ஒன்றையும் மாட்டி வைக்க வேண்டும்.

பாட்டி என்னும்போது இப்போதுள்ள பாட்டிகளின் ஞாபகம் வருகிறது.

பாட்டிகளால் எத்தனையோ விதங்களில் பலருக்குப் பிரயோசனமுண்டு.

குழந்தைகளுக்கு விளக்கெண்ணெய் கொடுப்பதற்குப் பாட்டி தான் வேண்டும். ஆனால் சில வீடுகளில் குழந்தைகள் அவளை விளக்கெண்ணெய்ப் பாட்டி என்று சொல்லும். ஆனால், அந்தப் பட்டப் பெயர் கூட இனிமேல் போய்விடும். ஏனென்றால், விளக்கெண்ணெய் குடித்து, விளக்கெண்ணெயைப் பத்து மயிர் இருக்கும் தலையில் தடவிக்கொண்டு வளர்ந்து வந்த டாக்டர்கள் 'குழந்தைகளுக்கு விளக்கெண்ணெயா? தான் வேண்டாம்' என்கிறார்கள். 'மில்க் ஆப் மக்னீஷியா', 'லிக்விட் பாரபின்' இதெல்லாம் கொடுக்கச் சொல்கிறார்கள்.

சில சமயம் குழந்தையின் அம்மாவும் அப்பாவும் வாய்ப் பேச்சால் குஸ்தி போட்டுக்கொள்வார்கள். இதன் முடிவாகத் தெய்வமே என்றிருக்கும் குழந்தையின் முதுகில் பொத்தென்று ஓர் அடி விழும்.

சில சமயங்கள் குழந்தைகள் முகம் பார்க்கும் கண்ணாடி மீது கல்லைப் போட்டால் உடையுமா, கட்டிலுள்ள மெத்தை மீது ஒரு டம்ளர் தண்ணீரை ஊற்றினால் அது நனையுமா என்று விஞ்ஞானப் பரீட்சை பார்க்கும்.



'குழந்தை வளர்ப்பதெப்படி' என்ற புத்தகங்களைப் படிக்காத அப்பா அம்மாக்கள் அந்த ஆராய்ச்சியை 'விஷமம்' என்று சொல்லிக் குழந்தைகளை அடிப்பார்கள். இதுபோன்ற சந்தர்ப்பங்களில் தலையிட்டுக் குழந்தையை எடுத்துக் கொண்டு போய்ச் சமாதானப் படுத்துவது பாட்டிதான்.



'அம்மா, ஒரே ஒரு கதை' என்று குழந்தை கேட்கும். ''ஒரே ஒரு ஊரில் எட்டாவது வில்லியம் என்று ஓர் அரசர் இருந்தார்'' என்று இந்தக் காலத்து அம்மாக்கள் சொல்வார்கள். பாட்டியோ, காக்கா கதை, குருவிக் கதை, தேவதைக் கதை, சாமி கதை எல்லாம் சொல்வாள். நிதானமாகவும், பாவத்துடனும், 'ஆக்ஷ'னுடன் சொல்வாள். புதிது புதிதாகக் கற்பனை செய்து சொல்வாள். அவளுக்குத் தர்க்க சாஸ்திரம் தெரியாது. சின்னஞ் சிறு கதை எப்படி எழுத வேண்டும் என்று தெரியாது. ஆகையால் கற்பனை சென்றபடி எல்லாம் கதை விடுவாள். குழந்தைகள் அதை முகத்தில் ஆச்சரியம் தோன்றக் கேட்டு அனுபவிக்கும்.

அப்பாவும், அம்மாவும் சினிமாவுக்கோ, நாடகத்துக்கோ, கல்யாணங்களுக்கோ, போகும்போது குழந்தைகளை அவள்தான் பார்த்துக் கொள்வாள்.

வீட்டு வாசலில் வெயிலில் ஏதாவது காய வைத்தால் அதைக் கவனித்துக் கொள்வாள்.

பேரன் பேத்திகள் ஊசியில் நூல் கோக்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கும்போது அதைச் சுலபமாகக் கோத்துக் கொடுக்கக் கூடிய பாட்டிகளும் இருக்கிறார்கள்.

ரேஷன் காலத்தில் பாட்டிகள் மிக மிக உபயோகப்படுவார்கள். அவளைத் தங்கள் வீட்டில் வைத்துக் கொள்ளாமல் துரத்தி விட்டிருக்கும் அவள் நாட்டுப்பெண் கூட அவள் தன்னை விட்டுப் பிரிந்ததே இல்லை என்று கணக்கில் சேர்த்துக்கொள்வாள்.

வீட்டில் யாராவது அற்பாயுளில் காலமானால், பாட்டி, ''நான் எதற்காக இருக்கிறேன், என்னைக் கொண்டு போகக் கூடாதோ?'' என்று தானே சொல்லிக் கொண்டு விடுவாள், மற்றவர்கள் அப்படிச் சொல்வதற்கு முன்னால். ஆனால் யமதர்மராஜன் அப்படி மரண பட்டா மாறுதல் செய்வதில்லை.

சாதாரணமாகப் பாட்டிகளுக்கு ஒரே ஒரு அற்ப ஆசை உண்டு. பேத்தி, பேரன்களுக்குக் கல்யாணம் பண்ணிப் பார்க்க வேண்டுமென்பதுதான். சில வீடுகளில் அதற்காகவென்றே சட்டுப்புட்டென்று கல்யாணத்தைப் பண்ணி வைப்பார்கள்; ஆனால் அதற்கடுத்த நாளும் பாட்டி இருந்து கொண்டுதானிருப்பாள். அதற்கடுத்த நாளும், அதற்கடுத்த நாளும் தான்! அவளுக்கு இன்னொரு அற்ப ஆசை உண்டு.. ''பேத்தி வயிற்றில் ஒரு பூச்சி...'' என்பாள்!

பாட்டி தனியே உட்கார்ந்திருக்கும்போது ஆழ்ந்த யோசனையிலிருப்பாள். திடீரென்று அவள் உதடுகளில் ஒரு புன்னகை அரும்பும். ஏற்கனவே குழிவிழுந்திருக்கும் கன்னங்களில் இன்னும் கொஞ்சம் குழி விழும். அவள் கைகள் தன் புடவையை இழுத்துப் போர்த்திக் கொள்ளும். முகத்தில் நாணமும், மகிழ்ச்சியும் கும்மாளம் போடும். அப்போது அவள் எதைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருப்பாள்? அது தனக்குக் கல்யாணம் நடந்ததைப் பற்றித்தான் இருக்கும்.

அவள் கண்கள் மூடும். வாய் முணுமுணுக்கும்.

''மத்தளம் கொட்ட
வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாம
நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி
மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக்...

கனாக் கண்டு கொண்டிருப்பாள் போலிருக்கிறது. தனக்குக் கல்யாணமான தினம் அவளுக்கு 'ப்ளாஷ்பாக்' மாதிரி மனத் திரையில் காட்சி அளித்திருக்கும்.

நான் பழைய கர்நாடகப் பாட்டியைப் பற்றிச் சொல்கிறேன். எழுபது, எழுபத்தைந்து வயதானாலும் கணவனைக் கண்டதும் மரியாதையாய் எழுந்து நிற்கும் அந்தப் பாட்டியைப் பற்றிச் சொல்கிறேன். நரைத்த மயிருக்குச் சாயம் ஏற்றி அதைக் கறுப்பாக்கிக் கொள்ளும் புதுரகப் பாட்டியை அல்ல.

அந்தப் பழைய பாட்டி பரம்பரை சிறிது சிறிதாக மறைந்து கொண்டு வருகிறது. இன்னும் பத்துப் பதினைந்து வருஷங்களில் அவர்கள் பூண்டோடு இல்லாமல் போய்விடும்.

இப்போது காலேஜில் படிக்கும் குமாரிகள் பாட்டிகளானால் எப்படி இருப்பார்கள், என்ன பேசுவார்கள், என்ன செய்வார்கள் என்று கொஞ்சம் கற்பனை செய்து பார்த்தால் அதன் முடிவு ஒரு ஹாஸ்ய நாடகமாக அமையும்.

ஒரு நாள் ஒரு பாட்டியுடன் பேசிக் கொண்டிருந்தேன். அவள் பேரன் பெயர் குப்புசாமி. ஒரு வக்கீல்.

அவரைத் தேடிக்கொண்டு வந்த ஒரு நண்பர், ''குப்புசாமி இருக்கிறானா?'' என்று பாட்டியைக் கேட்டார்.

பாட்டி அவரை ஏற இறங்கப் பார்த்தாள். பார்வையில் சிறிது கோபமும், வெறுப்பும் இருந்தது. ''குப்புசாமி அய்யர்வாளைக் கேட்கிறீர்களா?'' என்றாள்.

அந்தக் கேள்வியின் வார்த்தைகளிலுள்ள ஒவ்வோர் எழுத்தும் அட்சர லட்சம் பெறும்.

# மக்ளீன்ஸ்

## உபயோகித்து
## அந்த அதிகமான வெண்மையைப்
## பாருங்கள்!



### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!



# முக்தி

எம்.வி.வெங்கட் ராம்

**கை** பிடித்துப்பார்த்த டாக்டரும் கைவிரித்து விட்டார். இன்றோ, நாளையோ சீதாராமனின் இகலோக வாழ்க்கை முடிவடைய வேண்டியதுதான்.

ஐம்பத்தைந்து வயதில் ஒரு மனிதனுக்கு இவ்வளவு நோய்கள் எப்படி வந்தன என்று டாக்டருக்கே வியப்பாக இருந்தது; அதுவும் சமூகத்தில், நாலு பேர்கள் முன்னிலையில், கட்டுக் குடுமியுடனும், நெற்றியில் பளிச்சிடும் திருநீற்றுப் பூச்சுடனும், வாயில் முருகத் தியானத்துடனும் சிவப்பழம் போல் காட்சி யளித்து நகர சபையில்கௌன்சிலர் பதவி, வியாபாரிகள் சங்கத் தலைவர் பதவி போன்ற பல பதவிகளால் அலங்கரிக்கப்பட்டுப் பெரிய மனிதனாக நடமாடிய ஒரு பேர்வழிக்கு! வழுக்கி விழுந்து விலைக்கு வாங்கிய ஐசுவரியம் ரத்தத்தில் ஊறிச் செய்த கோளாறு; நெஞ்சத்தின் நாற்றத்தை வெளியிடுவது போல் துர்நீர் நிறைந்த மார்க் கட்டி ஒன்று; சர்க்கரையாக இனித்த அட்டூழியங்கள் சர்க்கரை நோயாக விளைந்த விளையாட்டு—ஆக, பல வகை நோய்களுக்குச் சீதாராமனின் உடல் வாசஸ்தலமாக மாறியிருந்தது. ஆறுமாத காலமாக, எந்த நோய்க்கு முதலில் மருந்து கொடுப்பது என்பதே டாக்டருக்குப் பிரச்னையாக இருந்தது. அதிகமாகத் தொந்தரவு செய்யும் நோய்க்கு அப்போதைக்குத் தேவையான சிகிச்சை செய்து வந்த டாக்டருக்கே அலுப்புத் தட்டிவிட்டது. ஆனால், அந்த அலுப்பு இனியும் நீடிக்கப் போவதில்லை. இன்றோ, நாளையோ அவனுடைய சிரமங்களுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, அவன், வந்த இடத்துக்குத் திரும்பியோ அல்லது சேர வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர வேண்டியோ, வீடு, வாசல், நிலபுலன்கள், இளம் மனைவி, குழந்தை குட்டிகள், வஞ்சனையாலும், மோசடியாலும் சேர்த்த சொத்து—எல்லாவற்றையும்—'துறந்து' இறுதி யாத்திரையைத் தொடங்கப் போகிறான்.....

படுக்கையில் கிடந்த சீதாராமனுக்கும் இந்தச் செய்தி தெரியும்; ஆனால் அவன் சாகத் தயாராக இல்லை. அவன் நிறைவேற்றிக் கொள்ளாத ஆசைகள் ஒன்றும் இல்லை எனலாம்; ஆனால் இப்போது ஒரு புது ஆசை ஆத்திரமாக எழுந்தது; அவன் சொரணையோடு இருந்தவரை அவனிடம் பெட்டிப்பாம்பாக அடங்கிக் கிடந்த மனைவியும் மக்களும், அவன் படுக்கையில் சாய்ந்ததும், வீட்டைத் துப்புரவாக்கும் துடைப்பத்துக்கு அளிக்கும் மரியாதையை அவனுக்கு அளிக்க ஆரம்பித்தனர். அவன் 'நல்லபடியாக'ப் பிழைத்து எழுந்திருக்க வேண்டும்; அவர்களுக்குச் சரியான விதத்தில் புத்தி புகட்டவேண்டும் என்ற ஒரே ஓர் ஆத்திரம்தான் அவனுக்கு. ஆனால் அது நிறைவேற வழி இல்லை என்று நினைத்தபோது அவனுக்குத் தாங்க முடியாத வருத்தம் உண்டாயிற்று.

அவன் அசைவற்றுப் படுக்கையில் கிடந்தான்; உடம்பு மீது வெள்ளைப் போர்வை போர்த்தியிருந்தது. தலையில் இரு பக்கம் கட்டு; வலது கை மார்பு மீதும், இடது கை படுக்கை மீதும் கிடந்தன. கண்கள் அநேகமாகப் பார்வை இழந்து விட்டன. கால்களும் முடங்கிவிட்டன. ஆனால் அந்த நேரத்திலும் அவனுடைய காதுகள் நன்றாக வேலை செய்து கொண்டிருந்தன; நெஞ்சத் துடிப்பும் அவனுக்குச் செவ்வையாகக் கேட்டது!

பக்கத்தில் யாரோ வந்து நின்றார்கள்; காலடிச் சத்தமும், குரலும் கேட்டன; சீதாராமனுடைய மூத்ததாரத்தின் மூத்த மகன் கிருஷ்ணனும் அவன் மனைவி கல்யாணியும்.

மருமகள் சொன்னாள்: "இன்னும் மருந்து கொடுக்கவில்லையா? காலா காலத்தில் கொடுக்க வேண்டாமா?"

"ஆமாம். இப்போது மருந்து கொடுத்து எல்லாம் ஆகிவிடப் போகிறதாக்கும். இனி பிழைக்காது என்று டாக்டர் கெடு வைத்து விட்டாரே! ஆறு மாசம் படுத்தியது போதாதா? இத்துடன் போய்விட்டால் சனி விட்டது என்று தலை முழுகி விடலாம்" என்றான் கிருஷ்ணன்.

''அதற்காக மருந்து தராமல் இருக்கலாமா?''

''தரலாம். இரு. ஒரு விஷயம் உன்னிடம் சொல்ல வேணும். இன்று இல்லாவிட்டால் நாளை இது தீர்ந்துவிடப் போகிறது. நாம் ஏதாவது வழி செய்துகொள்ள வேண்டாமா?''

''எதுக்கு வழி?''

''இங்கே பக்கத்தில் உட்காரு. சொல்கிறேன்... சும்மா நெருங்கி உட்காரு. யாரும் வரமாட்டார்கள். முடிந்தவரை நகை, துணிமணிகளைப் பத்திரப்படுத்திவிட வேண்டும். இல்லாவிட்டால் அந்த லண்டி நமக்கு ஒன்றும் கிடைக்காதபடி செய்து விடுவாள்.''

'லண்டி' என்று அவன் செல்லமாய்க் குறிப்பிட்டது, அவனுடைய சிற்றன்னை கோமளத்தை. அதாவது சீதாராமனின் இளையதாரத்தை.

''கணக்குத்தான் இருக்கிறதே.... அதில் உள்ளது போல் எல்லாரும் பிரித்துக் கொண்டால் போகிறது.''

''நீ ஒரு பைத்தியம். உன்னிடம் நானும் சொல்ல வந்தேனே!.... எவ்வளவு நகை கணக்கில் இல்லாமல் அனுமத்தாக இருக்கு. தெரியுமா? எத்தனை பேர்கள் தலையை இது தடவி நகையாய்ப் பண்ணி வைத்திருக்கு தெரியுமா? முன்னே ஒரு மூக்குத்தி, இரும்புப் பெட்டியிலிருந்து மாயமாக மறைந்ததே, அது திருட்டுச் சொத்துத்தானே? அந்த லண்டி எடுத்துக் கொண்டு, நம் மீது பழி போடவில்லையா? நாமும் ஏன் அப்படிச் செய்யக் கூடாது?''

அப்புறம் இருவரும் மெதுவாகப் பேசிக் கொண்டது சீதாராமனின் செவிகளுக்கு எட்டவில்லை.

மறுபடியும் மருமகள் சொன்னாள்: ''அது என்ன நீங்கள் அப்படிச் சொல்கிறீர்கள்? அந்தக் கடுக்கன்களை மாமனார் சாகும்வரை யாரும் எடுக்கக் கூடாது என்று சொன்னாரே? எடுத்துவிட்டால் எல்லாருக்கும் தெரிந்து ரகளை ஆகி விடுமே.''

''அதுக்கும் ஒரு வழி கண்டுபிடித்து விட்டேன்.''

சிறிது நேரத்தில் யாரோ தன் இரு காதுகளையும் பிடித்து வைரக் கடுக்கன்களைக் கழற்றுவதை உணர்ந்தான் சீதாராமன்; அவற்றுக்குப் பதிலாக வேறு கடுக்கன்கள் பூட்டப்பட்டன. முதலிலேயே துடித்துக் கொண்டிருந்த நோயாளியின் மார்பு படபடக்கத் தொடங்கியது. 'அந்தக் கடுக்கன் என்னுடையது; அதைத் தொடாதே. காலி ராஸ்கல்!' என்று வாய் விட்டுக் கத்த விரும்பினான் சீதாராமன். ஆனால் துணிப் பந்தை வைத்து அடைத்தாற்போல் வாயைத் திறக்கவும் முடியவில்லை.

அவனுடைய மகன், அவன் கண்களின் உருட்டலுக்கும் 'காலி ராஸ்கல்' என்ற அதட்டலுக்கும் அஞ்சி நடுங்கியவன், அந்த மகனே அவனுக்குப் பக்கத்தில் நின்று ஏளனம் செய்கிறான்; அஃறிணையாக்கி 'இது' 'அது' என்று பேசுகிறானே! இவ்வாறு நினைத்த நோயாளியின் கண்களில் நீர் கசிந்தது.

மீண்டும் இளம் தம்பதிகள் பேசிக் கொண்டனர். மகன் தான்: ''இது என்ன இரண்டாயிரம் ஆகும். உள்ளே இருக்கல்லவா, வைரச் செயின் அதைப் போலவே வேறே செய்து வைத்திருக்கிறேன். அதையும் யாருக்கும் தெரியாமல் மாற்றி விட வேணும்.''

''ரொம்பவும் ஜாக்கிரதையாகச் செய்யுங்கள். உங்கள் சின்னம்மாவுக்குத் தெரிந்தால், வீடே இரண்டு பட்டுவிடும். அது சரி, மருந்து கொடுங்கள்.''

''கொடுக்க வேண்டுமா?'' என்று அலுத்துக் கொண்டே கிருஷ்ணன் தகப்பனின் வாயைத்திறந்து மருந்தை ஊற்றினான்.

நோயாளிக்கு மருந்தே வேண்டியிருக்கவில்லை; வாயில் ஊற்றியதை அப்படியே கக்கினான்.

''சரிதான், மருந்து இறங்கவில்லை. இனி காலாவதிதான். நம் வேலையைச் சீக்கிரம் முடிக்க வேண்டும்'' என்று நகைக்காகப் பதறினான் கிருஷ்ணன்.

பிறகு மகனும் மருமகளும் ஏதோ சொல்லிச் சிரித்துக் கொண்டே அங்கிருந்து வெளிச் செல்லும் காலடிச் சத்தம் சீதாராமனின் காதில் விழுந்தது.

'பிழைக்க வேண்டும்' என்னும் ஆவல் இன்னும் மிருந்தது அவனுக்கு. வளர்த்த கடா மார்பில் பாயும் இந்தக் கோரத்தை அவனால் பொறுக்க முடியவில்லை. தன்னுடைய உதவியற்ற நிலைமையை எண்ணி ஏங்கினான் சீதாராமன்.

கூடவே, அவனுக்குள் மற்றோர் எண்ணம் எழுந்தது. கிருஷ்ணன் புதிதாக எதையும் செய்து விட்வில்லையே? வாழையடி வாழையாக, தன் தகப்பனைத் தானே அவன் ஒழுங்காய்ப் பின்பற்றுகிறான்? பொய்க் கணக்குகள் எழுதி, பொய்ச் சாட்சிகள் சொல்லி, பொய் வழக்குகள் ஆடி எத்தனை குடும்பங்களைச் சீதாராமன் பாழாக்கியிருக்கிறான்? எவ்வளவு பேர்களிடமிருந்து சொத்தைப் பறித்து, அவர்கள் 'ஐயோ' என்று கும்பி எரிந்து தவிப்பதைப் பார்த்து அவன்கேலிசெய்திருக்கிறான்.

கிருஷ்ணன் குறிப்பிட்டானே, அந்த மூக்குத்தியைச் சீதாராமன் அபகரித்த கதை எவ்வளவு சோகம் நிறைந்தது?

அதன் சொந்தக்காரர் ஒரு வயோதிகர்; அவனுக்கு



ஒவ்வொரு குடும்பமும் வாங்கக்கூடிய

# உயர் ரக டால்கம் பவுடர்!




# பாண்ட்ஸ் ட்ரீம்:ப்ளவர் டால்க்

## குளுமையானது, நறுமணமிக்கது, புத்துணர்ச்சி யூட்டுவது

பாண்ட்ஸ் ட்ரீம்:ப்ளவர் டால்க் குடும்பத்தினர் அனைவரும் எல்லாப் பருவ காலங்களிலும் உபயோகிக்க ஏற்ற உன்னத டால்கம் பவுடர். இதமளிக்கும் துல்லிய பாண்ட்ஸ் ட்ரீம்:ப்ளவர் டால்க் வறுத்தெடுக்கும் கோடையிலும் உங்களை நாள் முழுவதும் சுகமாக இருக்க உதவும். புழுக்கமான காலத்திலும் இனிய நறுமணமுள்ள பாண்ட்ஸ் ட்ரீம்:ப்ளவர் டால்க் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் பூராவும் சுகந்தமான புத்துணர்ச்சியுடன் வைக்கும்! உங்கள் குடும்பத்தினருக்காக ஒரு டின் பாண்ட்ஸ் ட்ரீம்:ப்ளவர் டால்க் இன்றே வாங்குங்கள்—இப்பொழுது 3 சைஸ்களில் கிடைக்கிறது!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

எட்டின உறவுகூட? அவனுக்கு அவர் கொடுக்கவேண்டிய கடன் கொஞ்சமிருந்தது: திடீரென்று நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் விழுந்த அக்கிழவர், தம் மனைவி மூலம் அந்த வைர மூக்குத்தியை அனுப்பிக் கணக்கைத் தீர்த்துக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டார். கிழவியிடமிருந்து மூக்குத்தியை வாங்கிக் கொண்ட சீதாராமன் 'நான் உங்களுக்கு வஞ்சனை செய்ய மாட்டேன்' என்று தான் வழிபடும் தெய்வமான முருகன் முன்னிலையில் கையடித்துக் கொடுத்தான். ஆனால் மறு நாளே அந்த நகையை மறைத்து விட்டு, அந்தக் கிழவர் மீது வழக்குப் போட்டு அவர் சொத்துக்களை யெல்லாம் ஜப்தி செய்தான்; அவர் வீட்டையும் ஏலத்துக்குக் கொண்டு வந்தான்...... செயலிழந்து படுக்கையில் இருந்த கிழவர் எவ்வளவு வேதனைப்பட்டாரோ?

அதன் விளைவாகவோ என்னவோ, அந்த மூக்குத்தி சீதாராமனின் குடும்பத்தில் ஒரு விஷ விருக்ஷத்தை வளர்த்தது.

மூக்குத்தியின் வைரம் மிக நன்றாக இருந்ததால் அது தன் மனைவிக்கு வேண்டும் என்று கேட்டான் கிருஷ்ணன்; 'அது எனக்குத்தான்' என்று பிடிவாதம் பிடித்தாள் சீதாராமனின் இளம் மனைவி கோமளம். மனைவிக்கும் மகனுக்கும் இடையில் சிக்கிக் கொண்ட அவன் இருவருக்குமே அதைக் கொடுக்காமல் பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டான்; ஆனால் சில நாட்களில் அது சிறகு முளைத்துப் பறந்து விட்டது. முதலில் அவனுக்குப் புத்திரன் மீது சந்தேகம் உண்டாயிற்று. ஆனால் அதை எடுத்தது இளைய மனைவிதான் என்று அவனுக்குத் தெரிந்து விட்டது. தெரிந்து என்ன செய்ய? அவளிடம் வாய் கொடுக்க அவனுக்கு எப்போதுமே பயம்.

சீதாராமன் செய்துள்ள அடாவடிக்கைகளில் இந்த மூக்குத்தி விவகாரம் அற்பமானது. ஆனால் யானையைச் சாய்க்கும் எறும்பு போல் இந்தச் சின்ன விஷயம் அந்தக் குடும்பத்தையே கவிழ்க்கத் தொடங்கியது. மூக்குத்தி காணாமற் போனதிலிருந்து கிருஷ்ணன் தன் சித்தியுடன் பேசவில்லை. வீடு இரண்டு கட்சிகளாய்ப் பிரிந்தது.

வைரத்தைத் தின்றால் மாத்திரம் விஷம் அல்ல, திருடினாலும் விஷம் ஆகி விடுகிறது என்பதை எண்ணிய அவன் நெஞ்சு 'தடதட' வென்று அடித்துக் கொண்டது.

அப்போது முதலில் தெளிவில்லாமலும், பிறகு தெளிவு பெற்றும், 'டக டக' என்று எழுந்தது ஓர் ஒலி; கவனித்துக் கேட்டான்: ஏதோ தமுக்கு அடிக்கும் சத்தம். அதைச் செவியுற்றதும் அவனுக்கு நடுக்கம் உண்டாயிற்று. அந்த மூக்குத்திக் கிழவரின் சொத்துக்களை அவன் இப்படித்தானே தமுக்கு அடித்து ஏலம் போட்டான்!

தமுக்கு ஒலிதான். சந்தேகம் இல்லை. நெருங்கி நெருங்கி அவன் பக்கத்தில் வந்தது அது. ஏதோ சொல்லுவதும் பிறகு தமுக்கைத் தட்டுவதுமாக வந்தது அந்த ஒலி. அந்தக் குரல் அவனுக்குப் பழக்கமானது போல் தோன்றியது. உற்றுக் கேட்டான், அந்தக் கிழவரின் குரல் அல்லவா அது?

அந்தக் குரலைக் கேட்பதற்காக அவன் செவிகள் நீண்டன; அந்தக் கிழவர் சொல்லிக் கொண்டிருந்தார்:

''—கஸ்பா கும்பகோணம் புதிய தெருவில் இருக்கும் ராமநாதன் குமாரன் சீதாராமனின் உயிர் இன்று பிற்பகல் மூன்று மணிக்குப் பகிரங்கமாக ஏலம் விடப்படும்.....படும்...''

அவன் திடுக்கிட்டான்; இது என்ன விந்தை! உயிரையாவது, ஏலம் போடவாவது! உலகில் நடக்காத அதிசயமாக இருக்கிறதே!

மறுபடியும் தமுக்குச் சத்தம், மறுபடியும் அந்தக் குரல்!

''ஆண்டவர் சீதாராமனுக்கு விலை மதிப்பு இல்லாத உடலையும் உயிரையும் கடனாய்க் கொடுத்தார்; ஆனால் அவன் அவைகளைக் கண்ட விதங்களில் விரயம் ஆக்கி விட்டு முதலுக்கே மோசம் நினைக்கிறான். ஆகையால், அவன் உயிரைப் பறித்துக் கொள்ளத் தீர்மானித்த ஆண்டவர் அவன் மீது 'டிக்கிரி' வாங்கி, அவன் உயிரை ஏலத்துக்குக் கொண்டு வந்து விட்டார். வாங்க விரும்புகிறவர்கள் பிரதிவாதி சீதாராமன் வீட்டில் பிற்பகல் மூன்று மணிக்கு ஆஜராகவும்.......''

அவன் உள்ளத்தில் திகில் மூண்டது. உண்மையாக அது தமுக்கு ஒலிதானா? அல்லது மார் துடிக்கும் ஒலியா என்று சந்தேகம் உண்டாயிற்று; இதயத் துடிப்பு கோர்ட் பாஷையாகவா இருக்கும்?

இல்லை, தமுக்கு ஒலிதான், ஐயோ, தமுக்கு ஒலிதான்! இதோ மீண்டும் கேட்கிறது!

''மிகவும் பாழடைந்து போன அவன் உயிரை யாரும் ஏலத்தில் எடுக்கா விட்டால் ஆண்டவர் அதை இடித்து அழிக்கப் போகிறார்.......''

அவனுடைய நெஞ்சுத் தோலையே உரித்து அதனைத் தமுக்கு செய்து, அதன் மீது தட்டுகிறார் போலும் அந்த வயோதிகர். மேலும் மேலும் மேலும் மிகுந்து மார்பில், வயிற்றில் தலையில், உடல் எங்குமே ஊடுருவிக் கிழித்துக் கொண்டு வெளியேற முயல்வது போல், ஒலித்தது அது!

அந்த ஒலியால் அமுக்குண்ட அவன் முழுப் பிரக்ஞையும் இழந்தான்.

அரைகுறையாக உணர்வு வந்த போது, அவனுடைய இளம் மனைவி வீட்டுக் குமாஸ்தாவிடம் பேசுவது பக்கத்தில் கேட்டது.

''நீங்கள் பெட்டிச் சாவியை என்னிடம் கொடுங்கள். இன்றைக்குள் இது தீர்ந்து விடும். என் குழந்தைகளுக்கு வேண்டியதை யெல்லாம் நான் ஜாக்கிரதை செய்துகொள்ள வேண்டாமா....?''

''ஆனால் சின்ன முதலாளி.....?''

''சின்ன முதலாளியும் ஆச்சு, பெரிய முதலாளியும் ஆச்சு. சாவியை இப்படிக் கொடுங்கள். உங்களையும் கவனித்துக் கொள்கிறேன்; எனக்குத் தெரியாதா?..... இருந்தும் சனியன், இறந்தும் சனியன் ஆகும் போல் இருக்கிறது. நாற்பத்தைந்து வயசுக்கு மேலே பதினாறு வயசுப் பெண்ணைக் கட்டிக் கொள்ளத் தெரிந்தது; அவளுடைய பிற்காலத்துக்கு ஏதாவது செய்யவேணுமே என்று அறிவு இருந்ததா? உயில்கூட எழுதாமல் இப்படி விழுந்து விட்டதே. என் பிராரப்தம் இந்தப் பிணத்தோடு மாரடிக்க வேண்டி

யிருந்தது...... இனியும் நான் பட்டும் படாமலும் இருக்க முடியுமா? பணப் பெட்டிச் சாவி என்னிடமே இருக்கட்டும்.''

''இப்போது ராகு காலம். மூன்று மணிக்குக் கொடுக்கிறேன்.''

'எல்லாம் மூக்குத்தியால் வந்த வினை. அதைத் திரும்பவும் அந்தக் கிழவியின் குடும்பத்தில் சேர்த்து விடு' என்று சொல்லத் துடித்த நாக்கு செத்துக் கிடந்தது. ஆனால் எப்படியாவது அதைக் கூறி விடுவது என்று உறுதியுடன் மிஞ்சியிருந்த சக்தி அனைத்தையும் வாய்க்குக் கொண்டு வர முயன்றான்.

அவனுக்கு மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்குவதைக் கண்ட கோமளம் அச்சம் கொண்டாள். என்ன இருந்தாலும், கழுத்தை நீட்டிய பாசம் அவளுக்கு அவனிடம் அனுதாபம் உண்டாகியது. கணவனின் காதருகில் வாய் வைத்துக் கூறினாள்: ''இனி இந்தப் பக்கத்து நினைப்பை விட்டு முருகன் பெயரைச் சொல்லுங்கள். அதுதான் நல்ல கதிக்குப் போகும் வழி.''

ஆனால் முருகன் அல்ல, மூக்குத்தியே அவனுக்குக் குல தெய்வமாகத் தோன்றியது. அது சொந்தக்காரனிடம் சேர வேண்டும் என்று கத்த விரும்பியது வாய்; மார்புக்குள் மூச்சு நிறைந்து வயிற்று நரம்புகளும் தொண்டை நரம்புகளும் புடைத்துக் கொண்டன. 'மூ.......மூ.......' என்று மூக்கி முனகி முனகினான், தன் ஆற்றலை எல்லாம் திரட்டி.

''முருகா, முருகா!'' என்று கூக்குரல் இட்டாள் மனைவி. ''ஐயரே, சீக்கிரம் ஜடம் கொளுத்துங்கள். தேங்காய் உடையுங்கள், சீக்கிரம்!''

ஃ ஃ ஃ

இறுதி மூச்சுப் பிரியும்போதும் சீதாராமன் முருக நாமத்தைக் கைவிட வில்லை என்று ஊரார் பேசிக் கொண்டனர்; தவறு அது? நல்லதும் கெட்டதும் சேர வேண்டிய இடம் அதுதானே?

# காப்பி மகாத்மியம்!

நாளின் தொடக்கத்தில் நமது வாழ்வுக்குச் சுவை சேர்க்கும் காப்பியின் வரலாறும் சுவையானதுதான்!

ஒன்பதாம் நூற்றாண்டின் மத்திய காலத்தில்தான் காப்பி முதன் முதலாகக் கண்டு பிடிக்கப்பட்டது. யாரால் தெரியுமா? ஓர் ஆட்டுமந்தையால்!

அரேபிய ஆட்டிடையன் ஒருவன் திடீரென்று ஒரு நாள் தனது மந்தையிலுள்ள ஆடுகள் உற்சாகமாகக் கும்மாளமிடுவதைப் பார்த்துத் திகைப்பும் வியப்பும் அடைந்தான். அருகில் சென்று பார்த்தபோதுதான் விஷயம் விளங்கியது.

தற்செயலாகக் காப்பிச் செடிகளின் விதைகளை மேய்ந்துதான் அவை அப்படிக் குதூகலம் அடைந்திருக்கின்றன என்று கண்டு, தானும் அவற்றைச் சுவைத்து மகிழ்ந்தான். அதன் மூலம் ஒரு சுவையான பானத்தையே உலகுக்கு அறிமுகப்படுத்திவிட்டான்!

ஆனால் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டு முன்பு தடங்கல்கள் பல!

அராபிய முஸ்லிம்கள் நீண்ட நேரப் பிரார்த்தனையின்போது விழித்திருப்பவருக்குக் காப்பி உதவுகிறது என்று கண்டு அதைப் பரவலாகப் பருக ஆரம்பித்தார்கள். இதைக் கண்ட முஸ்லிம் மதப் பெரியோர்கள் காப்பியை யாரும் பருகவே கூடாது என்று தடை விதித்து விட்டார்களாம்.

பதினேழாம் நூற்றாண்டில் துருக்கி மூலமாக ஐரோப்பாவில் காப்பி பரவியபோது அங்கும் இதே கதிதான்!

ஜெர்மனியில் காப்பியை வறுப்பதற்கே தனியான 'லைசென்ஸ்' வாங்க வேண்டியிருந்தது!

காப்பியின் உற்சாகமான ஆதிக்கத்தின் கீழ் இங்கிலாந்தின் இலக்கியமே வளர்ந்திருக்கிறது. ஸ்டீலும், அடிசனும், ஸ்விஃப்டும் டிஃபோவும் பிற இலக்கிய ஜாம்பவான்களும் காப்பி நிலையங்களுக்கு விஜயம் செய்வதுண்டு.

டிரைடனின் வாழ்க்கை வரலாற்றை எழுத வந்த ஜான்சன், டிரைடன் வழக்கமாகச் சென்று காப்பி அருந்தும் நிலையத்துக்குச் சென்று அவர் உட்கார்ந்து காப்பி அருந்தும் நாற்காலியில் (அந்த நாற்காலிக்கு 'டிரைடன் நாற்காலி' என்றே பெயர் வந்து விட்டதாம்!) தானும் சற்று நேரம் உட்கார்ந்து பார்த்துப் புதிய உத்வேகம் பெற்றார் என்று அறியும்போது காப்பியின் அடியார்களாகிய நமக்கெல்லாம் எவ்வளவோ உற்சாகமாக இருக்கிறதல்லவா?

சந்திரகிரி மலைப் பகுதியைச் சேர்ந்த பாபா புதன் சாகிப் என்பவரே முதலில் ஏழு காப்பி விதைகளை இந்தியாவுக்குக் கொண்டுவந்ததாகக் கூறப்படுகிறது. அவை சந்திரகிரி மலைகளில் விதைக்கப்பட்டனவாம்.

சில மாதங்களுக்கு முன்பு காப்பி போர்டின் புதிய கட்டிடத்தைப் பெங்களூரில் திறந்து வைத்த ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் அவர்கள் ஒரு செய்தியை வெளியிட்டார்.

சுதந்திரப்போர் நடந்து கொண்டிருந்த காலத்தில் வட நாட்டில் ஒரு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த காப்பி விடுதியில் காங்கிரஸ், முஸ்லீம் லீக், இந்து மகாசபை கொடிகள் சம்பந்தமாகக் கைகலப்பு ஏற்பட்டது. அவர்கள் ஒருவர் கொடியை ஒருவர் கீழே இழுத்துப் போடுவதற்காகக் 'குஸ்தி' போட்டுக் கொண்டிருந்தனர். அப்போது அதே அறையில் நான்காவது கொடி ஒன்று தோன்றியது. ''காப்பி அருந்துங்கள்! மேன்மேலும் காப்பி அருந்துங்கள்'' என்ற வாசகம் பொறிக்கப்பட்ட கொடிதான் அது! அதைப் பார்த்ததும் சண்டை போட்டுக்கொண்டிருந்தவர்கள் உடனடியாகச் சண்டையை நிறுத்திவிட்டுக் காப்பியை நாடிச் சென்றனர். அவர்களுடைய 'காப்பி பக்தி' அந்தச் சிறு அறையில் அவ்வாறு ஒற்றுமையை உண்டுபண்ண முடிந்தது! — வியார்ஜி

"கொஞ்ச நேரம் வேலை செய்வதற்குள் இத்தனை களைப்பா?"



இல்லை, இல்லவே இல்லை!

நான் போர்ன்-விடா சாப்பிடுகிறேன்.
தினசரி இரண்டு கப் சாப்பிடுகிறேன்.
போர்ன்-விடா அளிக்கும் சக்தியினால்
நான் முழுவதும் களைப்பின்றி
வேலை செய்கிறேன்.

# BOURN-VITA

சக்திக்கும் வலிமைக்கும்






தயாரிப்பாளர்கள்,

Cadbury's

# துக்ளக்

* வரலாற்றாசிரியர் கிப்பன் ஒரு பெண்ணைக் காதலித்தார். அவளை வேறொரு டாக்டரும் காதலித்தார். கிப்பனுக்கு அவளுடன் அடிக்கடி பேசக் கிடைத்த வாய்ப்பு டாக்டருக்குக் கிடைக்கவில்லை. உடனே அவர் கிப்பனை நோக்கி ''உமது பேச்சால் அவளுக்குத் தலை வலி வந்தால் நான் குணமாக்கி விடுவேன்'' என்றார். அதற்கு மறுமொழியாகக் கிப்பன் ''உமது வைத்தியத்தால் அவள் இறந்து விட்டால் அவள் சாகாமல் வாழும்படி அவள் மீது காவியம் பாடி வைப்பேன்'' என்று பதிலடி கொடுத்தார்.

கீறல்

* உலகப் போரின்போது முஸோலினியிடமிருந்து ஹிட்லருக்கு ''உணவுப் பொருட்களை உடனடியாக அனுப்பவும்'' என்ற அவசரத் தந்தி வந்தது. ஹிட்லர் முஸோலினிக்குப் பதில் தந்தியைக் கீழ்க்கண்டவாறு கொடுத்தார்: ''உணவுப் பொருள் போர்முனைக்கே போதவில்லை. சிறிது காலம் உங்கள் வயிறுகளைப் பெல்ட்டால் இறுக்கிக் கட்டிக்கொண்டு பொறுத்திருக்கவும்.'' அதற்கு முஸோலினி வேறொரு தந்தி கொடுத்தார். ''சரி! பெல்டுகளையாவது விரைவில் அனுப்பி வைக்கவும். பெல்ட்டுகள் கைவசம் இல்லை.''

கீறல்

* அமெரிக்காவில் சுமார் 45 ஆங்கில எழுத்துக்கள் கொண்ட பெயரையுடைய ஓர் ஏரி இருக்கிறது. அதை உச்சரிக்க இதுவரை யாராலும் முடியவில்லை. அதை வைத்தவர்கள் செவ்விந்தியர்களாம். அதன் பொருள் ''நீ உன் கரையில் மீன் பிடி. நான் என் கரையில் மீன் பிடிக்கிறேன். நடுவில் யாரும் மீன் பிடிக்க வேண்டாம்'' என்பது.

கீறல்

* அறிஞர் பெர்னார்ட் ஷா தம் வீட்டுக்கு வந்த விருந்தினருடன் சிறந்த பல விஷயங்களைப் பற்றி நெடு நேரம் பேசிக்கொண்டிருந்தார். ஆனால் அவருடைய பேச்சை அவர் மனைவி சிறிதும் கவனிக்காமல் தையல் வேலையில் ஈடுபட்டிருந்தார். இதற்கான காரணத்தைப் பேச்சின் இறுதியில் அவர் மனைவியிடம் விருந்தினர் கேட்க அவர் மனைவி, ''நான் இவருடைய இதே பேச்சை ஆயிரம் தடவை கேட்டுவிட்டேன். இன்று அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது, என் கைகள் தையல் வேலையைச் செய்து கொண்டிருக்காமல் இருந்தால் அவர் கழுத்தைத் தாமாகவே சென்று நெரித்திருக்கும்'' என்றார் ஏளனமாக.

கீறல்

* பிரெஞ்சுக் கவிஞர் வால்டேர் மிகுந்த ஞாபக சக்தியைப் பெற்றவர். அவர் ஒரு நாள் ஒபாரனது கவிதை ஒன்றைப் படித்து விட்டு அதனை வெகுவாகப் புகழ்ந்துகொண்டிருந்தார். ஆனால் அதன் பின்புதான் தெரிய வந்தது அது வால்டேரே எழுதிய கவிதை என்று. எப்படி அவருடைய ஞாபக சக்தி?

கீறல்

* மார்க் ட்வெய்ன் ஒரு நாள் ஒரு பொதுக் கூட்டத்துக்குப் போனார். அது வெளிநாட்டிலிருந்த ஆதரவற்றவர்களுக்காக நிதி திரட்டப் போடப்பட்ட கூட்டம். ஒரு பேச்சாளர் நீண்ட நேரம் ஆதரவற்றவர்களின் பரிதாப நிலையைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தார். ஒரு வழியாக அவர் பேச்சு முடிந்ததும் மார்க் ட்வெய்ன் கூறினார்: ''இவர் பேச்சைக் கேட்ட முதல் ஐந்து நிமிடங்களில் என்னிடம் இப்போது பாக்கெட்டில் இருக்கும் பணம் முழுவதையும் இந்த நிதிக்குக் கொடுத்துவிட வேண்டும் என எண்ணினேன். அடுத்த ஐந்து நிமிடங்களில் என்னிடம் உள்ள சொத்து முழுவதையும் அதற்குக் கொடுத்துவிட விரும்பினேன். ஆனால் இந்தப் பேச்சாளர் முடிவில்லாமல் பேசிக் கொண்டே போகப் போக மற்றவர்கள் கொடுத்ததைக் கூடப் பிடுங்கிக் கொள்ள வேண்டும் என்று நான் நினைக்க ஆரம்பித்தேன்!''

கீறல்

* ஒரு பெரிய வியாபாரி தமது கடையில் பெருமையுடன் கீழ்க்கண்டவாறு விளம்பரம் செய்தார். ''இங்கிருந்து பலவகைகளில் எது வேணுமானாலும் கிடைக்கும்.'' அது ஒரு மீன் வியாபாரக் கடை. அடுத்த நாள் ஒருவர் வந்தார். அவர் வியாபாரியிடம் ''எஸ்தர் வில்லியம்ஸ் கிடைக்குமா?'' என்றாரே, பார்க்கலாம்!

கீறல்

* கல்லூரியில் வகுப்பு நடந்து கொண்டிருந்தது. விரிவுரையாளர் பாடம் நடத்தும் போது இடையிடையே கேள்விகள் கேட்க, மாணவர்கள் யாரும் பதில் அளிக்கவில்லை. உடனே பாடம் நடத்துவதை விட்டு விட்டு அவர் தொடர்ந்து கேள்விகள் கேட்டார். மாணவர்கள் ஓரிருவர் அரைகுறையாகப் பதிலளிக்க அவர் கோபத்துடன், ''நீங்கள் நேராக நரகத்துக்குத்தான் போகப் போகிறீர்கள்'' என்றார். உடனே அதற்கு மட்டும் ஒரு மாணவன் அமைதியாக, அழகாக ''இப்போதே நாங்கள் அங்குதான் இருக்கிறோம் சார்!'' என்றான்.

—சரவணன்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

பெண்டிரின்
மேனியெழில் இரகசியம்!

# மலபார் க்ளோரி சோப் *

உங்களுக்கு இப்போது எவ்வாறு எழிலுடனிருப்பது என்று தெரியும்! மலபார் க்ளோரி சோப் உங்கள் சருமத்திற்கு இதமாக இருக்கிறது. அதன் மென்மையான, வழவழப்பான நுரையும் அதன் நறுமணமும் உங்கள் சருமத்திற்கு ஒரு பளபளப்பை அளிக்கின்றன.




வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ், கோழிக்கோடு
மற்றும் தபால் பெட்டி நெ. 3254, பம்பாய்—3.

* ஐ.எஸ்.ஐ. தரத்தின்படி
தயாரிக்கப்பட்டது.



Alpana—VS TM 200

